# பழம்நீ



பத்துமலை முருகன்
மலேசியா

தொகுப்பு : லெ.மு.மு. முத்துமாணிக்கம், தேவகோட்டை

உ
சிவமயம்

# பழம்நீ



## 2008

**சர்வஜித் - தை - 1**
**15-01-2008**

தொகுப்பு :-
**லெ.மு.மு. முத்துமாணிக்கம்**
*நிர்வாக அறங்காவலர் - பழம்நீ அறக்கட்டளை*
*6, நாச்சியப்பன் தெரு, வெ.ஊரணி வடக்கு,*
**தேவகோட்டை - 630 302.**

இருப்பிடம் :-
மனை எண் : 16/384, கே.கே. நகர்,
மதுரை – 625 020.
தொலைபேசி : 0452 – 2587499, 6537255

பழம்நீ 2008

இருபத்தி ஒன்பதாம் ஆண்டு வெளியீடு – 2008

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

அச்சும் அமைப்பும் :
**ஸ்ரீ விநாயகா ஸ்கிரீன்ஸ்,**
(ஆப்செட் பிரிண்டர்ஸ்)
40A/92, பார்த்தசாரதி தெரு,
எஸ்.எஸ். காலனி, மதுரை – 625 010.
தொலைபேசி : 2600300, 2602490

**Dr. Justice AR. Lakshmanan**
*(Former Judge, Supreme Court of India)*
*Chairman, Law Commission of India*

ILI Building (IInd Floor),
Bhagwandas Road,
New Delhi-110001
Tel. : 91-11-23384475
Fax : 91-11-23383564

## வாழ்த்துச் செய்தி

"பழநி" அறக்கட்டளையின் அமைப்பாளர் மதிப்பிற்குரிய செ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்கள் ஆற்றிவரும் அருட்பணி அளவிடற்கரியது. போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர் அவர்.

பழநிமலைக்குப் பாதயாத்திரையாகச் செல்பவர்களுக்கு "பழநி" புத்தகம் ஒரு வரப்பிரசாதம். அவ்வாறு நடந்துசெல்பவர்கட்கு மருத்துவ உதவியும் அளிக்கப்பட்டு வருவதாக அறியும் போது கேட்க இனிமையாக இருந்தது. நகரத்தார் சங்கம் மதுரையின் தலைவராக அவர் ஆற்றிய செயல்பாடு பாராட்டுதற்குரியது.

"பழநி" புத்தகம் அருமையான பக்திப்பாடல்களைத் தொகுத்து முத்துமாணிக்கம் அவர்கள் வழங்கி வருகிறார்கள்.

தேவகோட்டையைச் சார்ந்த அவர்களது ஆன்மிக, அருட்பணி, நகரத்தார் நலம் பேணும் பணி தொடர எனது வாழ்த்துக்கள். வளர்க அவர் தம் தொண்டு.

அன்புள்ள,

12.1.2008

## தேவகோட்டை
## அருள்மிகு வள்ளி விநாயகர்



வேத நெறியளித்து வேண்டும் பொருள்கொடுத்து
நாதனெனப் போற்றும் நமதுபிரான் – ஓதுபுகழ்
வள்ளிசெட்டி யார்மரபோர் வாழ்த்தி வணங்குகின்ற
வள்ளி கணபதியா வான்.

லெ.மு.மு.சொ. வள்ளியப்பன்

# தொகுப்புரை

தமிழ்நாட்டில் முருகப் பெருமான் வழிபாடு சிறப்புடையது, தொன்மையானது, தூயது. தமிழ்க் கடவுள் என்னும் தனிச் சிறப்பு முருகனுக்கே உரியது. இன்றைக்கு பலபேர் முருகனை வழிபடு கடவுளாகக் கொண்டு நாளும் வழிபட்டு வருகின்றனர். முருகனை வழிபட்டால் முன்னியது முடியும் என்று கருதி வழிபடுவோர் பலராவர். முருகன் வழிபாடு வழிவழியாக சிறந்து வந்துள்ளது. வழிபடும் அடியார்களும் வாழையடி வாழையாக வளர்ந்து வந்துள்ளனர்.

நக்கீரர், கச்சியப்பர், அருணகிரியார், பாம்பன் சுவாமிகள், வள்ளலார் வரை பாமாலை பல தொகுத்து முருகன் புகழ் பாடியுள்ளனர். அக்காலக் கவிஞர்களின் பாடல்களையும், இக்காலக் கவிஞர்களின் பாடல்களையும் கொண்டு இந்த ஆண்டு பழம்நீ நூல் 29ஆவது ஆண்டு வெளியீடாக வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

இந்நூலுக்கு அணிந்துரை அளித்தத் தமிழறிஞர் செம்மல் டாக்டர் சுப. அண்ணாமலை அவர்களுக்கும், முன்னுரை தந்துள்ள அருள்நெறித் தொண்டர் மானகிரி லெ. சண்முகம் செட்டியார் அவர்களுக்கும் மற்றும் சிறப்புரை நல்கிய பழனி பட்டக்காரர் நிலைய அதிபர் திரு. K.S. நல்லதம்பி அவர்களுக்கும் எமது நன்றி.

பழம்நீ சார்பில் மாநகர் மதுரையில் 06–01–2008ல் நடைபெற்ற கூட்டு வழிபாட்டிற்கும், பாட்டும் பொருளும் – பட்டமளிப்பு நிகழ்ச்சிகளுக்கும் ஒத்துழைப்பு நல்கிய பெருமக்களுக்கும், கவிஞர் பெருமக்களுக்கும், இம்மலர் அன்பளிப்பு வெளியீடாக வெளியிட உதவும் வகையில் விளம்பரங்கள் தந்துதவியவர்களுக்கும், விளம்பரங்கள் சேகரித்துத் தந்துதவிய பெருமக்களுக்கும் மற்றும் பலவகையிலும் ஒத்துழைப்பு தந்த நல்ல உள்ளங்களுக்கும்,

பழனியில் எங்கள் குழுவினர் தங்குவதற்கு 42 ஆண்டுகளாக இடம் தந்து உதவி வருகிற பட்டக்காரர் நிலையத்தின் அதிபர் A. சேனாபதிக் கவுண்டர் M.P. அவர்களின் குடும்பத்தினர்க்கும், பாதயாத்திரையில் வழியில் எங்களை உபசரித்து வசதிகள் செய்து தரும் பெருமக்கள் அனைவருக்கும் எங்களது இதயங்கனிந்த நன்றியை உரித்தாக்குகிறோம்.

இம்மலரை நல்ல முறையில் அச்சேற்றித்தந்த மதுரை ஸ்ரீ விநாயகா ஸ்கீரின்ஸ் பிரிண்டிங் அண்டு ஆப்செட் உரிமையாளர் திரு. இராம. லெட்சுமி நாராயணன் அவர்களுக்கும் எமது நன்றி.

பழம்நீ அறக்கட்டளை மருத்துவப் பணிக்கு உதவிவரும் மதுரை அப்பலோ மருத்துவமனை, டாக்டர் SV. பெத்தபெருமாள் அவர்களுக்கும், அப்பலோ மருத்துவமனை ஊழியர்களுக்கும் மற்றும் மருந்துகளும், மருத்துவப் பொருள்களும் தந்துதவும் அனைவர்க்கும் எங்கள் நன்றி.

வேண்டியது வேண்டியாங்கு எய்தி எல்லோரும் இன்புற்று வாழ, பழம்நீயாக திருவாவினன்குடி நிற்கும் திருக்குமரன் திருவருளை வேண்டுகிறோம்.

அனைவருக்கும் இனிய பொங்கல் நல்வாழ்த்துக்கள்.

தேவகோட்டை
*15-01-2008*

அன்புள்ள
**லெ.மு.மு. முத்துமாணிக்கம்**
**(பழம்நீ)**

பழம்நீ 2008

"அருள்நெறித்தொண்டர்"
**லெ. சண்முகம் செட்டியார்**
மானகிரி
காரைக்குடி (வழி)

ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர்
மரஅறுவை மில்
பைபாஸ் ரோடு
மதுரை–625 016
போன் : 2386412
2300451
செல் : 9443773137

# முன்னுரை

தொன்மையும், பெருமையும் வாய்க்கப் பெற்றது பழனித் திருத்தலம். பழனித் திருத்தலத்தின் சிறப்பினையும், பெருமையினையும் பல அருளாளர்கள் போற்றிப் பாடி உள்ளனர். "அதிசயம் அனேகமுற்ற பழனிமலை" என்றும், "பதினாலுலகோர் புகழ் பழனி" என்றும் அருணகிரிநாத சுவாமிகள் பழனித் தலத்தைப் போற்றுகின்றார். பழனி முருகன் மீதும், ஆவினன்குடி முருகன் மீதும் அருணகிரிநாத சுவாமிகள் திருப்புகழ்ப் பாடல்களை அருளியுள்ளார். இத்தகு சிறப்புப் பெற்ற பழனி முருகன் கோயிலில் ஆண்டுதோறும் பல திருவிழாக்கள் கொண்டாடப்பட்டு வருகின்றன.

தைப்பூசத் திருவிழா பழனி முருகன் கோவிலில் கொண்டாடப்பெறும் பெருவிழாவாகும். இவ்விழாவின் போது தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்து குறிப்பாக செட்டிநாட்டுப் பகுதிகளிலிருந்து பக்தர்கள் பழனி மாமலைக்குப் பாதயாத்திரையாக வந்து பழனி தெண்டாயுதபாணியை வழிபடுகின்றனர். பாத யாத்திரையாக வரும் பக்தர்கள் கடும் விரதமிருந்து முருகன் மீது பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டு வருகிறார்கள்.

இவ்வகையில் 29ஆவது ஆண்டு வெளியீடாக இப்பக்தி பாமலர் பழம்நீ நூலினை "முருகன் அருட்செல்வர்" தேவகோட்டை லெ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்கள் வெளியிடுகின்றார்கள். பாதயாத்திரை அன்பர்கள் பழம்நீ நூலினைப் பெற்று, பாடி மகிழ்ந்து தங்கள் வழிநடைப் பயணத்தில் ஏற்படும் துயரங்களை மறந்து பக்தி பரவசத்தோடும், உள்ள உறுதியோடும் வழிநடைப் பயணம் செல்வதற்கு இந்நூல் துணைபுரிகின்றது.

இம்மலரில் பழனிப் பாதயாத்திரைக்கே உரிய பழைய மரபு பாடல்களும், புதிய பாடல்களும் இடம் பெற்று விளங்குகின்றன.

பழம்நீ அறக்கட்டளையின் மூலம் ஆண்டுதோறும் கூட்டுவழிபாடு, சொற்பொழிவு, அருள்நெறித்தொண்டர், அருளிசைமணி பட்டம் வழங்கி தொண்டு செய்தும், ஆன்மீக அன்பர்களை ஊக்கப்படுத்தியும் வருகிறார்கள் திரு. முத்துமாணிக்கம் அவர்கள்.

கடந்த 43 ஆண்டுகளாகப் பாதயாத்திரை புரியும் திரு. முத்துமாணிக்கம் அவர்கள் பக்தர்கள் தேவையறிந்து குன்றக்குடி முதல் பழனி வரை மருத்துவ வசதி செய்தும் வருகின்றார்கள் என்பதை இங்கே குறிப்பிட்டு ஆக வேண்டும்.

தமிழ்த்தொண்டு, அருள்தொண்டு, ஆன்மீகத் தொண்டு செய்துவரும் "முருகன் அருட்செல்வர்" பழம்நீ லெ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்களின் தொண்டு சிறக்க எம்பெருமான் பழனி முருகனை நினைந்து போற்றி நிறைவு செய்கிறேன்.

அனைவருக்கும் இனிய பொங்கல் நல்வாழ்த்துக்கள்.

இப்படிக்கு

*12-01-2008* **லெ. சண்முகம்**

மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பேரவைச் செம்மல்
தமிழறிஞர்
**டாக்டர் சுப. அண்ணாமலை**

மனை எண் : 98
அறிஞர் அண்ணாநகர்
மதுரை–625 020.
தொலைபேசி : 0452–2533827
அலைபேசி : 99940 20720

# அணிந்துரை

பாதயாத்திரை ஒரு தவம். பழனிக்குப் பாதயாத்திரை செல்லும் அன்பர்கள், வேறு நினைவின்றி, பக்தியுணர்வே உள்ளத்தில் ததும்ப வெயிலென்றும் மழையென்றும் பாராமல் நடந்துசெல்கிறார்கள். மின்காந்தம் ஏற்றப்பட்ட இரும்புத் துண்டு, அதனைவிடப் பெரிய இரும்புத்துண்டை இழுத்துச் செல்லும், அதைப்போல பக்தியுணர்வு இந்த அன்பர்களைக் கல்லிலும், முள்ளிலும், கடும்பாதைகளிலும் நடத்திக் கொண்டு செல்கிறது. கல்லும் முள்ளும் அவர்கள் பாதத்தை உறுத்தாதா? உறுத்தும்; ஆனால் அவர்கள் அதை உணரமாட்டார்கள். அதனால்தான் “கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை” என்று பாடுகிறார்கள்.

இந்தப் பக்தர் பெருமக்களுக்குச் சென்ற 40 ஆண்டுகளுக்கு மேலாக, பழம்நீ பாதயாத்திரைக்குழு அமைத்துத் தொண்டு செய்துவரும் தேவகோட்டை திரு. லெ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்கள், சில ஆண்டுகளாக, மருத்துவத்தொண்டும் புரிந்து வருகிறார்கள். மருந்து வணிகர் பலரும் இப்பணிக்கு மருந்துகள் அளித்துதவி வருகிறார்கள். மதிப்பிற்குரிய டாக்டர் SV. பெத்தபெருமாள், அப்பலோ மருத்துவமனையிலிருந்து மருத்துவ ஊர்தியுடன் மருத்துவரும் செவிலியரும் வழிநடையின் போது உடன் வந்து உதவும்படி ஏற்பாடு செய்துள்ளார்.

## பழம்நீ 2008

"இசைபாடுபவனாகவே நான் உனது சன்னிதியில் நிற்கும் தகுதியைப் பெறுகிறேன்" என்று கூறுவார் கவியரசர் தாகூர். முருகப்பெருமான் அருள்பெற, பாதயாத்திரை செல்லும் அன்பர்கள் மனமுருகிப் பாடும் பாடல்களைத் தொகுத்து ஆண்டுதோறும் வெளியிட்டு வருகிறார் அன்பர் முத்துமாணிக்கம் அவர்கள். இவ்வாண்டு வெளியிடப்பெறும் பழம்நீ வெளியீட்டில், அன்பர்கள் விரும்பிப்பாடும் வளமையான பாடல்களும், புதிய பாடல்களும் இணைந்து இடம் பெறுகின்றன. சென்ற ஆண்டுகளில் இவ்வெளியீட்டைப் பெற்ற அன்பர்கள் இதனைப் பெரிதும் வரவேற்றுள்ளார்கள்.

அன்பர்கள் இப்பாமாலையைப் படித்துப் பக்திச் சுவையும் இலக்கியச் சுவையும் நுகர்ந்து மகிழ நல்ல வாய்ப்பளித்த அன்பர் திரு. லெ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்களைப் பாராட்டுகின்றேன்.

அன்பன்

மதுரை
14-1-2008

K.S. நல்லதம்பி B.A.,
தலைவர்
ஸ்ரீ லெட்சுமி அம்மாள் அறக்கட்டளை
பட்டக்காரர் நிலையம்
அடிவாரம் -
பழனி


பழனி : 242114
ஈரோடு : 2268681
செல் : 94423 51163

# சிறப்புரை

மெய்யன்புடையீர்,

வணக்கம், நலனே வாழ்க!

தமிழகத்தில் இறைவன் அருள்ததும்பும் திருத்தலங்கள் பல உள்ளன. அவற்றில் தொன்மையான கோவில் பழனி. சேர தொண்டை, பாண்டிய மன்னர்கள் ஒரு சேரப் போற்றிய தலம் பழனி. தமிழ் இலக்கியங்களில் ".சித்தன் வாழ்வு" எனச் சிறப்பு பெற்ற திருத்தலம் பழனி. சித்தர் போகர் அருள் திருவிளையாடல்கள் நிகழ்ந்த இடம் பழனி. பழனிமலை மீதுள்ள பாலதண்டாயுதபாணி திருக்கோலம் போகரின் அருட்கொடை.

பழனியில் நடக்கும் விழாக்களில் தைப்பூசம் முக்கிய திருவிழா. பல நாட்கள் விரதமிருந்து பாதயாத்திரையாகவும், காவடி சுமந்தும் முருகனை வழிபடுவது பல ஆண்டுகளாக நடந்து வருகிறது.

இத்தகைய பழனித் திருத்தலத்திற்கு செட்டிநாட்டுப் பகுதியிலிருந்து நகரத்தார் சமூகத்தினர் பன்னெடுங்காலமாகப் பாதயாத்திரையாக வந்து செல்கின்றனர். அந்த வகையில் 42 ஆண்டுகளாகத் தைப்பூச விழாவிற்கு வரும் பாதயாத்திரைக் குழுவினர்க்கு நமது பட்டக்காரர் நிலையத்தில் தங்குவதற்கு வசதி

செய்து கொடுக்கும் வாய்ப்பு எங்களது தந்தையார் அமரர் சேனாபதிக்கவுண்டர் M.P. அவர்கள் மூலம் எங்கள் குடும்பத்தினர்க்கு கிட்டியது அந்த ஞானதெண்டாயுதபாணியின் திருவருள்.

தேவகோட்டை உயர்திரு லெ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்கள் தலைமையில் வரும் பாதயாத்திரை அன்பர்களை எமது சைவ மடாலயத்திற்கு வரவேற்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். அவர்கள் ஆண்டுதோறும் வெளியிட்டு வரும் பழம்நீ பாடல்தொகுப்பு நூல் இந்தாண்டும் 29ம் ஆண்டு வெளியீடாக வெளிவந்து உங்கள் கரங்களில் பக்திமணம் பரப்புகிறது.

திரு. லெ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்கள் எங்கள் தந்தையார் சேனாபதிக்கவுண்டர் M.P. அவர்களின் இனிய நண்பர். தொடர்ந்து 29 ஆண்டுகளாக பழம்நீ பாடல் புத்தகத்தை வெளியிட்டு நற்பணி செய்கின்றார். இசையும், இனிய சிந்தனையும், அடிதோறும் முருகன் திருப்பெயரும் அமைந்த இப்பாடல்களை, இப்பழம்நீ நூல் மூலம் பெற்று, அன்பர்கள் பாடி மகிழ்வாராகுக என வாழ்த்திப் பாதயாத்திரை அன்பர்களை எமது சைவ மடாலயத்திற்கு வரவேற்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

அன்பர் முத்துமாணிக்கம் அவர்களின் நற்பணியைப் பாராட்டி, அவர்க்கு எல்லா வளங்களையும் நல்குமாறு எமது வழிபடு கடவுளாகிய ஞானதெண்டாயுதபாணியை இறைஞ்சுகிறேன்.

அனைவருக்கும் இனிய பொங்கல் நல்வாழ்த்துக்கள்.

அன்பன்

**கே.எஸ். நல்லதம்பி**

பழநி
12–1–2008

# பழம்நீ பாதயாத்திரைக்குழு
# பழம்நீ அறக்கட்டளைக்கு
# உறுதுணையாய் இருப்பவர்கள்

திருமிகு

1. A. சேனாபதிக்கவுண்டர் M.P. குடும்பத்தினர் — சங்கராண்டாம்பாளையம்
2. M. சின்னப்பக்கவுண்டர், காணியாளர் — பழனி
3. டாக்டர் சுப. அண்ணாமலை — மதுரை
4. பேராசிரியர் சொ.சொ.மீ. சுந்தரம் — மதுரை
5. சி.வீர.ந. சுப்பையா செட்டியார் — தேவகோட்டை
6. N. லெட்சுமணன் — சீர்காழி
7. P. நடராசன் — இராசபாளையம்
8. PR. அழகப்பக்கோனார் — கண்டவராயன்பட்டி
9. V. சுப்பிரமணி — சென்னை
10. P. வெங்கடாசலம் — செம்மடைப்பட்டி
11. M. பழனியப்பன் — மதுரை
12. செல்லப்பன் — திருச்சி
13. S. திருநாவுக்கரசு — கோயம்புத்தூர்
14. தோழர் பெரியய்யா (சந்திரன்) — காளாப்பூர்
15. A. தியாகராசன் S/o. அப்பாவு செட்டியார் — நத்தம்
16. சிவந்தி செட்டியார் — நத்தம்
17. S. இராமச்சந்திரன் — நத்தம்
18. AR.N.Rm. நாராயணன் செட்டியார் — திண்டுக்கல்
19. R.S. நாயுடு குடும்பத்தினர் — கோபால்பட்டி
20. PL. செந்தில்நாதன் — தேவகோட்டை
21. வெ.நா.மு.ராம.ராம. லெட்சுமிநாராயணன் (ஸ்ரீ விநாயகா ஸ்கிரீன்ஸ், மதுரை) — தேவகோட்டை
22. N. அண்ணாமலை — வேந்தன்பட்டி
23. Rm.L. மணிகண்டன் — மதுரை
24. நேமத்தான்பட்டி AR. சுப்பையா — சேலம்
25. T. ராமு — சென்னை

# பழம்நீ அறக்கட்டளை மருத்துவப் பணிக்கு உதவியவர்கள்

| | | |
|---|---|---|
| 1. | டாக்டர் எஸ்வி. பெத்தபெருமாள் **அப்பலோ மருத்துவமனை** | மதுரை |
| 2. | டாக்டர் எஸ். சுவாமிநாதன் | மதுரை |
| 3. | டாக்டர் எம்ஆர். முத்தையா | மதுரை |
| 4. | ஆறுமுகா சர்ஜிகல் காட்டன்ஸ் | சத்திரப்பட்டி |
| 5. | முத்துஸ் மெடிக்கல்ஸ் | மதுரை |
| 6. | வெங்கடேஸ்வரா ஏஜென்சீஸ் | மதுரை |
| 7. | எஸ்பி.ஏ. பார்மா | மதுரை |
| 8. | எஸ்பி.எஸ்.எஸ். மெடிக்கல்ஸ் | மதுரை |
| 9. | நாகப்பா ஏஜென்சீஸ் | மதுரை |
| 10. | ஸ்ரீ நாகப்பா ஏஜென்சீஸ் | மதுரை |
| 11. | ஸ்ரீ பழனியப்பா | மதுரை |
| 12. | ஸ்ரீ கல்யாணி ஏஜென்சீஸ் | திண்டுக்கல் |
| 13. | கல்யாணி பார்மா | திண்டுக்கல் |
| 14. | கல்யாணி மெடிக்கல் மார்ட் | திண்டுக்கல் |
| 15. | N. பழனியப்பன் “ஆச்சி வந்தாச்சு” | மதுரை |
| 16. | குமார் மெடிக்கல்ஸ் | மதுரை |
| 17. | ஜெயா மெடிக்கல் கார்ப்பரேசன் | மதுரை |
| 18. | பழனியப்பா பார்மா | மதுரை |
| 19. | சொர்ணா ஏஜென்சீஸ் | மதுரை |
| 20. | டூ இந்தியன் பார்மா | மதுரை |
| 21. | ஸ்ரீ எஸ்பி.ஏ. | மதுரை |
| 22. | ஸ்ரீ விநாயகா பார்மாசூட்டிகல்ஸ் | மதுரை |
| 23. | திருப்பதி அண்டு திருமலா | மதுரை |
| 24. | பார்மாபேப்ரிகான் | மதுரை |
| 25. | ராஜம் மெடிக்கல்ஸ் | மதுரை |
| 26. | கற்பகம் மெடிக்கல்ஸ் | மதுரை |
| 27. | முத்து பார்மாசூடிகல்ஸ் | சேலம் |
| 28. | தனம் மெடிக்கல்ஸ் | சென்னை |

## பழநிப் பாதயாத்திரையில்

தேவகோட்டையிலிருந்து பழநி வரை உள்ள ஊர்களின் தூரம் தோராயமாக கீழே தரப்பட்டுள்ளது.

| | ஊர் | கிலோ மீட்டர் |
|---|---|---|
| | தேவகோட்டை | |
| To | சங்கராபுரம் (ஊற்றாங்கிணறு) | 15 |
| " | பாதரக்குடி | 4 |
| " | குன்றக்குடி | 4 |
| " | பிள்ளையார்பட்டி | 4 |
| " | வைரவன்பட்டி | 1 |
| " | காவடிகள் பிரியும் இடம் | 1 |
| " | கண்டவராயன்பட்டிக் கண்மாய் | 7 |
| " | திருக்காளப்பட்டி | 5 |
| " | மு. கோவில்பட்டி | 2 |
| " | மருதிபட்டித்தோப்பு | 1 |
| " | சதுர்வேதமங்கலம் | 3 |
| " | காளாப்பூர் | 3 |
| " | சிங்கம்புணரி (சேவுகப்பெருமாள் கோவில்) | 4 |
| " | சொக்கலிங்காபுரம் | 3 |
| " | பாண்டாங்குடி (களத்துதோசை) | 2 |
| " | மதுரைச் சாலை சந்திப்பு | 2 |
| " | கொட்டாம்பட்டி பிரிவு | 1 |
| " | மணப்ச்சேரி | 3 |
| " | வெள்ளாளபட்டி | 2 |
| " | சுண்டக்காய்ப்பட்டி | 1 |
| " | சமுத்திராபட்டி | 3 |
| " | ஏரக்காய்ப்பட்டி | 3 |
| " | நத்தம் மின்வாரியம் | 3 |
| " | நத்தம் | 1 |
| " | குட்டூர் விலக்கு | 4 |
| " | உலுப்பக்குடி | 1 |
| " | எரமநாயக்கன்பட்டி | 3 |
| " | கருப்பர் கோவில் குதிரைகள் | 3 |
| " | கணவாய்ப்பட்டி | 1 |
| " | கோபால்பட்டி | 2 |

| | | |
|---|---|---|
| To | உப்பாறு (கன்னிகாபுரம்) | 3 |
| ” | மேட்டுப்பட்டிக்கடை | 2 |
| ” | சாணார்பட்டி | 2 |
| ” | கொசவபட்டி | 1 |
| ” | இடைச்சிமடம் | 1 |
| ” | விராலிப்பட்டி | 1 |
| ” | நொச்சிஓடைப்பட்டி | 2 |
| ” | ரெட்டியார்பட்டி | 3 |
| ” | திண்டுக்கல் பவர் ஹவுஸ் | 4 |
| ” | திண்டுக்கல் அபிராமி அம்மன் கோவில் | 4 |
| ” | ராமய்யன்பட்டி | 4 |
| ” | பாலராசக்காபட்டி | 2 |
| ” | இடையபட்டி | 2 |
| ” | முத்தனம்பட்டி | 1 |
| ” | கொத்தப்புள்ளி (கதிர்நரசிங்கப்பெருமாள் கோவில்) | 4 |
| ” | ரெட்டியார்சத்திரம் | 1 |
| ” | செம்மடைப்பட்டி | 7 |
| ” | புதுச்சத்திரம் | 3 |
| ” | சாலைப்புதூர் | 3 |
| ” | ஒட்டன்சத்திரம் | 1 |
| ” | குழந்தைவேலன் சந்நிதி (அரசப்பிள்ளைப்பட்டி) | 4 |
| ” | விருப்பாச்சி | 4 |
| ” | சத்திரப்பட்டி | 4 |
| ” | சிந்திலவாடம்பட்டி | 4 |
| ” | கணக்கன்பட்டி | 3 |
| ” | பச்சிளநாயக்கன்பட்டி | 1 |
| ” | பழைய ஆயக்குடி | 2 |
| ” | புது ஆயக்குடி | 1 |
| ” | இடும்பன்குளம் மலைச்சரிவு | 6 |
| ” | பழநி | 1 |

<u>பழநியில் நீராடல்</u>

முதல் நாள் வையாபுரி
இரண்டாம் நாள் வரட்டாறு
மூன்றாம் நாள் சண்முகநதி
நான்காம் நாள் சரவணப்பொய்கை

# பழம்நீ பாதயாத்திரைக்குழு
# பழம்நீ அறக்கட்டளை

பழநிப் பாதயாத்திரையில் பங்கேற்று நல்ல முறையில் தொண்டாற்றும் அன்பர்களுக்கு அருள்நெறித்தொண்டர் எனும் பட்டமும் மற்றும் பக்திப் பாடல்கள் பாடும் அன்பர்களுக்கு அருளிசைமணி எனும் பட்டமும் மதுரையில் பழம்நீ பாதயாத்திரைக்குழு – பழம்நீ அறக்கட்டளையின் சார்பில் பனிரெண்டு ஆண்டுகளாக அளித்துப் பாராட்டப் பெற்றவர்களின் பெயர்களை வெளியிடுவதில் மகிழ்ச்சி கொள்கிறோம். 1991 ஆம் ஆண்டு பட்டம் வழங்கிய பெருந்தகை கோவிலூர் ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ காசி விசுவநாத ஞான தேசிக சுவாமிகள்.

## 1991
### அருள்நெறித்தொண்டர்

திருவாளர்கள்

| | |
|---|---|
| கரு. செந்தில்நாதன் செட்டியார் | – தேவகோட்டை |
| சுப. சிதம்பரம் | – தேவகோட்டை |
| மா. வீரப்பன் | – காரைக்குடி |
| அழ. அழகப்பன் | – பள்ளத்தூர் |
| செ. செல்லப்பன் | – தேவகோட்டை |
| பெருமாள் வீரப்பன் | – தேவகோட்டை |

### அருளிசைமணி

| | |
|---|---|
| கதி. ரெங்கநாதன் (எ) மாயாண்டி | – கண்டனூர் |
| காசிஸ்ரீ செ.நா.வெ. அருணாசலம் செட்டியார் | – காரைகுடி |
| காசிஸ்ரீ இரா. வயிரவன் | – தேவகோட்டை |
| அரு. சுப்பையா | – நேமத்தான்பட்டி |
| காசிஸ்ரீ ந. காசிநாதன் | – தேவகோட்டை |
| சித. சம்பந்தம் | – கோட்டையூர் |
| மா. நாகப்பன் | – தேவகோட்டை |

1992 ஆம் ஆண்டு முதல் பட்டம் வழங்கிவரும் பெருமகனார் அறநெறிஅண்ணல் திரு. **லெ. நாராயணன் செட்டியார்** அவர்கள்.

## 1992
### அருள்நெறித்தொண்டர்

| | |
|---|---|
| அரு. பழநியப்பச் செட்டியார் | – பள்ளத்தூர் |
| காசிஸ்ரீ அரு. சோமசுந்தரன் | – தேவகோட்டை |
| S. கிருஷ்ணசாமி | – சிவகாசி |
| AL. PR. அழகப்பன் | – கண்டவராயன்பட்டி |
| காசிஸ்ரீ தேனிமலையான் | – வலையபட்டி |
| இராம. கண்ணப்பன் | – தேவகோட்டை |

### அருளிசைமணி

| | |
|---|---|
| கு.வெ.கு. வெங்கடாசலம் செட்டியார் | – மதுரை |
| எல். பாலசுப்ரமணியன், I.O.B. | – சென்னை |
| திருவையாறு மீ. சேவுகன்செட்டி | – சென்னை |
| கண. சொக்கலிங்கம் | – தேவகோட்டை |
| ஞானியார் ராம. லெட்சுமணன் | – தேவகோட்டை |
| V. சந்திரன், மதுரை வங்கி | – மதுரை |
| திருமதி. A. தமிழரசி | – பனையபட்டி |

## 1993

### அருள்நெறித்தொண்டர்

முருகனடிமை முருகேசன் – சாலைகிராமம்
பி.ச. முத்துக்கருப்பன் – பவானி
RM. SP. இராமநாதன் – தேவகோட்டை
மு.அ. இராமநாதன் – மேலைச்சிவபுரி
C. துரைசிங்கம் – கானாடுகாத்தான்

### அருளிசைமணி

லெ. சோமசுந்தரம் – பெங்களூர்
அர.சி. பழநியப்பன் – கண்டனூர்
சுப. வீரப்பன் – ஈரோடு
அரு. கண்ணப்பன் – தேவகோட்டை
எஸ். பழநியப்பன் – காரைக்குடி
திருமதி. இராம. லெட்சுமி ஆச்சி – இராயவரம்

## 1994

### அருள்நெறித்தொண்டர்

இராம. சிவராமன், M.A.B.L. – கீழச்சிவல்பட்டி
மு.மா. அசோக்குமார் – கோயம்புத்தூர்
கண. சந்திரசேகர் – தேவகோட்டை
மெ. அன்புமணி – காரைக்குடி
V.K. ஸ்ரீநிவாசன் – அண்ணாமலைநகர்
சோம. முருகப்பன் – மதுரை

### அருளிசைமணி

லோகநாதன் (திருப்புகழ் சபை) – மதுரை
A. சுப்ரமணியன் – சென்னை
R. சத்தியமூர்த்தி – பலவான்குடி
மாரிமுத்து – தேவகோட்டை
முருகு. பெரியண்ணன் – சென்னை
S. இராமகிருஷ்ணன் – கோட்டையூர்
திருமதி. வள்ளியம்மை ஆச்சி – சொ.புதூர்

## 1995

### அருள்நெறித்தொண்டர்

ஆறு. சுப. ஆறுமுகம் செட்டியார் – மேலைச்சிவபுரி
கு. நவநீதகிருஷ்ணன் – பரமக்குடி
சொ. பழனிமலை – கண்டனூர்

### அருளிசைமணி

மானகிரி S. முத்துக்குமார் – சென்னை
காசிஸ்ரீ மு. வீரப்பன் – கோட்டையூர்
திருமதி. இராசலெட்சுமி – காரைக்குடி

## 1996

### அருள்நெறித்தொண்டர்

டாக்டர் S.V. பெத்தபெருமாள் – மதுரை
எஸ். அப்பாவு செட்டியார் – நத்தம்
கே. லெட்சுமணன் – கொத்தமங்கலம்

### அருளிசைமணி

சொ. சகுந்தலா – பொன்.புதுப்பட்டி
வ. செல்வகணேசன் – தேவகோட்டை
கே. சோமசுந்தரம் – கண்டவராயன்பட்டி

## 1997

### அருள்நெறித்தொண்டர்

சி.வ.வீரப்ப செட்டியார் (SVR) – தேவகோட்டை
டாக்டர் எம்ஆர். முத்தையா – மதுரை
கி.நா.கி.ஸ்ரீ. சுந்தரேசன் – காரைக்குடி

### அருளிசைமணி

எஸ்பி. மணியன் – வலையபட்டி
அரு. மீனாட்சிசுந்தரம் – காரைக்குடி
எஸ்.கே.ஆர். சுப்பிரமணியன் – தேவகோட்டை

## 1998

### அருள்நெறித்தொண்டர்

சி.ராம. நாகப்ப செட்டியார் – மகிபாலன்பட்டி
காசிஸ்ரீ K. சேதுராமன் – பரமக்குடி
S.M. சுந்தரம் – மேலைச்சிவபுரி

### அருளிசைமணி

V. நாராயணன் – காரைக்குடி
நா. சுப்பிரமணியன் – கல்லல்
செல்வி. நா. நாச்சம்மை – கருங்குளம்

## 1999

### அருள்நெறித்தொண்டர்

RM. முத்தையா செட்டியார் – S.சொக்கநாதபுரம்
CN. நாச்சியப்பா – கண்டரமாணிக்கம்
PL. மோகன் – சேலம்

### அருளிசைமணி

சுப. நாராயணன்செட்டியார் – நடராசபுரம்
AR.V. வள்ளியப்பன் – பள்ளத்தூர்
AN. விஸ்வநாதன் – பள்ளத்தூர்

## 2000

### அருள்நெறித்தொண்டர்

ஆறு.பழ.சி.பழ.லெ. சிதம்பரம் – காரைக்குடி
P. முத்தையா – மதுரை (விசாலாட்சி நகர்)
திருமதி. மு. காமாட்சி – கண்டரமாணிக்கம்

### அருளிசைமணி

L. செல்லப்பன் – கண்டனூர்
B. ரவீந்திரன் – செல்லூர், மதுரை
திருமதி. அ. ஆனந்தவல்லி – தேவகோட்டை

## 2001

### அருள்நெறித்தொண்டர்

ST. அண்ணாமலை – சேலம்
சா.மு.மு. பழனியப்ப செட்டியார் – கொத்தமங்கலம்
AR.S. இராசகோபால் – விரையாச்சிலை
V. சுப்பிரமணி – சென்னை

### அருளிசைமணி

KM. லெட்சுமணன் – காரைக்குடி
TK. இராமச்சந்திரன் – சென்னை
KM. காசிவிஸ்வநாதன் – கொத்தமங்கலம்
KM. கண்ணன் – கடியாபட்டி

## 2002

### அருள்நெறித்தொண்டர்

கந்தனருள் இராமநாதன் – காரைக்குடி
ராம.சித. இராமநாதன் செட்டியார் (எ) மணி – பி. அழகாபுரி
ST. பழனியப்பன் – மிதிலைப்பட்டி

### அருளிசைமணி

CT. நாராயணன் (எ) காளை – கோட்டையூர்
G. ஆறுமுகம் – சென்னை
S. நாகம்மை ஆச்சி – பொன்.புதுப்பட்டி

## 2003

### அருள்நெறித்தொண்டர்

என்.எஸ்.பி. சுப்பிரமணியன் செட்டியார் – கண்டனூர்
ஏஎல். சந்திரமௌலி – கானாடுகாத்தான்
பேராசிரியர் எஸ்பி. அருணாசலம் – தேவகோட்டை

### அருளிசைமணி

சுப. நாராயணன் செட்டியார் – பட்டமங்கலம்
லெ. சிவபெருமான் – தேவகோட்டை
நா. இராமநாதன் – ஆ. தெக்கூர்

## 2004

பட்டமளித்து உரையாற்றியவர் : தமிழ்சான்றோர் செம்மல்
டாக்டர் **சுப. அண்ணாமலை** அவர்கள்

### அருள்நெறித்தொண்டர்

| | |
|---|---|
| கொத்தமங்கலம் அன்பு லெட்சுமணன் | – சென்னை |
| திருக்குறள் செ. செல்வம் | – செல்லூர், மதுரை |
| வணக்கம் சுப்ரமணியன் | – ஆத்தங்குடி |

### அருளிசைமணி

| | |
|---|---|
| உ. சிறுவயல் பாசுபதம் | – சென்னை |
| பா. முத்து நாராயணன் | – தேவகோட்டை |
| சிவ. சாமிநாதன் | – வலையபட்டி |

### அருள்நெறித்தொண்டர் 2005 (2006)

| | |
|---|---|
| நா. மாணிக்கம் செட்டியார் | – செம்பனூர் |
| R. சொக்கலிங்கம் | – கல்லல் |
| KR.R. சதிஷ் | – தேவகோட்டை |

### அருளிசைமணி

| | |
|---|---|
| L. வள்ளியப்பன் | – புதுவயல் |
| நா. மெய்யம்மை ஆச்சி | – கண்டரமாணிக்கம் |
| L. லெட்சுமி | – தேவகோட்டை |

### அருள்நெறித் தொண்டர் 2006-2007

| | |
|---|---|
| RM. அழகப்பன் (எ) ஆறுமுகம் | – கோ. அழகாபுரி |
| சா. ஜெயம் கொண்டான் | – மேலைச்சிவபுரி |
| A.S. நடராசன் | – சிதம்பரம் |

### அருளிசைமணி

| | |
|---|---|
| TR. சுப்பையா | – தேவகோட்டை |
| K.N. நாச்சியப்பன் | – கருங்குளம் |
| AR. ஜெயந்தி | – தேவகோட்டை |

### அருள்நெறித்தொண்டர் 2007-2008

| | |
|---|---|
| மானகிரி லெ. சண்முகம் செட்டியார் | – மதுரை |
| தேவகோட்டை காசிஸ்ரீ அண. மீனாட்சிசுந்தரம் | – சென்னை |

### அருளிசைமணி

| | |
|---|---|
| கோட்டையூர் கரு. அருணாசலம் | – சென்னை |
| அரிமளம் ப. செல்லப்பா | – சென்னை |
| VR. லெட்சுமிஆச்சி | – தேவகோட்டை |

உ
சிவமயம்

# பழம்நீ அறக்கட்டளை

"பழம்நீ" பாதயாத்திரைக் குழுவின் சார்பில் 35 ஆண்டு காலமாகத் தொடர்ந்து பழநி அடிவாரத்தில் உள்ள பட்டக்காரர் மடத்தில் தை மாதம் பூர நட்சத்திரத்தன்று மதியம் **அன்னதானமும்**, 28 ஆண்டுகளாக மதுரையில் டிசம்பர் கடைசி வாரம் அல்லது ஜனவரி முதல் வாரம் ஒருநாள் **கூட்டுவழிபாடும்**, அன்னதானமும் தொடர்ந்து நடத்தப் பெற்று வருகிறது.

கண்டனூர் அருளாடியார் திரு. பழனியப்ப செட்டியார் அவர்கள் ஆண்டுதோறும் கலந்து கொண்டு ஆசியுரை ஆற்றி விபூதி பிரசாதம் வழங்கி வருகிறார்கள்.

காவடி எடுத்து வருபவர்களுக்கும், உடன் வருபவர்களுக்கும் நத்தத்தில் மாரியம்மன் கோவில் அருகில் காலையில் **பால் / காப்பி வழங்கப்படுகிறது.** பாதயாத்திரையின் போது வழி நடையில் முடிந்த உதவிகள் செய்யப்படுகிறது.

1991ம் ஆண்டு முதல் பாதயாத்திரையில் வழி நெடுகிலும் பயன்படும் வண்ணம் அப்பலோ மருத்துவ மனைமெடிக்கல் வேன் மூலம் **மருத்துவ வசதிக்கு** ஏற்பாடு செய்யப்படுகிறது.

செந்தமிழ்க் கந்தன் திருவருட் கருணையால் பைந்தமிழ் பாடும் பழநிமா மலைக்கு பல்லாண்டுகளாகப் பாதயாத்திரை செய்து பக்திப் பயிர் வளர்க்கும் மெய்யன்பர்களுக்கு **"அருள்நெறித் தொண்டர்"** என்ற பட்டமும் சான்றிதழும் வழங்கி சிறப்பிக்கப்படுகிறது.

ஆடும் மயிலில் அமர்ந்திடும் வேலனைப் பாடும் பணியே பணியாய்க் கொண்டு பழனிப் பாதயாத்திரையிலும் வழிபாட்டுக் கூட்டங்களிலும் உள்ளம் உருக வள்ளல் முருகனைத் தெள்ளிய தமிழால் சிறப்புறப் பாடிப் பணி செய்யும் மெய்யன்பர்களுக்கு **"அருளிசைமணி"** என்ற பட்டமும் சான்றிதழும் வழங்கிச் சிறப்பிக்கப்படுகிறது.

ஆன்மீகம் வளரவும், அறப்பணிகள் பெருகவும், ஊக்கமளிக்க வேண்டும் என்பதற்காக மேலே கண்ட அறப்பணிகள் தொடர்ந்து பன்னெடுங்காலம் சிறப்புற நடைபெறவேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் ஆன்மீக அன்பர்கள் பலரும் சேர்ந்து ஒரு அறக்கட்டளை நிறுவி அதன்மூலம் தொடர்ச்சியாய் நடத்திவரத் திட்டமிட்டுள்ளோம். எங்களது திட்டம் நல்ல முறையில் அமைந்து பணி சிறக்க நல்ல உள்ளம் கொண்ட **அன்பர்கள் யாவரும் பொன்னாலும், பொருளாலும், உழைப்பாலும் ஒத்துழைப்பு நல்கி இத்திருப்பணியில் பங்கு பெற வேண்டுகிறோம்.**

அன்புள்ள,
**லெ.மு.மு. முத்துமாணிக்கம்,**
அமைப்பாளர்

| |
|---|
| காசோலை / வரைவோலை<br>அனுப்ப வேண்டிய முகவரி<br>**எம். முத்துமாணிக்கம்**<br>*384, கே.கே. நகர், மதுரை - 20.* |

உ
சிவமயம்

# பழநிப் பாதயாத்திரைப் பயண விபரம்



*நிகழும் சர்வஜித்து ஆண்டு மார்கழி மாதம் 28ஆம் தேதி (13-1-2008) ஞாயிற்றுக்கிழமை முதல் தை மாதம் 19ஆம் தேதி (2-2-2008) சனிக்கிழமை வரை (21 நாட்கள்)*

*சர்வஜித்து வருடம் மார்கழி மாதம்*

| | |
|---|---|
| 28உ 13–1–08 (ஞா) | தேவகோட்டை நகரப் பள்ளிக்கூடத்தில் காவடி கட்டி வைத்து இரவு பூஜை. |
| 29உ 14–1–08 (தி) | காவடிகள் நகர்வலம் வந்து சிலம்பணி சிதம்பர விநாயகர் கோவிலில் தங்குதல். |
| தை1உ 15–1–08 (செ) | காலை காவடியும், பாதயாத்திரீகர்களும் புறப்படுதல். பகல் ஊத்தாங்கிணற்றில் (சங்கராபுரம்) காவடி நிவேத்தியம். இரவு குன்றக்குடி, காரைக்குடி, கண்டனூர் மற்றும் செட்டிநாட்டில் உள்ள பல ஊர்க் காவடிகளும் பாதயாத்திரீகர்களும் வந்து சேர்வார்கள். |
| 2உ 16–1–08 (பு) | காலை **குன்றக்குடியிலிருந்து** அருளாடியாருடன் ரத்தினவேல் துணை கொண்டு புறப்படுதல். பகல் **கண்டவராயன்பட்டி** கண்மாயில் காவடி நிவேத்தியம் – கண்மாய்க்கு **மேல்கரையில்** உள்ள திரு. PR. அழகப்பக் கோனார் **வீட்டு மாடியில்** லெ.மு.மு.சொ. வள்ளியப்பன் – பஞ்சு **வழங்கும் பகல் உணவு** – இரவு மருதுபட்டித்தோப்பில் முதல் நாள் **பூஜை**. |
| 3உ 17–1–08 (வி) | காலை சிங்கம்புணரி சேவுகப் பெருமாள் கோவிலில் காவடி தங்கி, பகல் மணப்பச்சேரியில் காவடி நிவேத்தியம் (பாதயாத்திரீகர்கள் வெள்ளாளப்பட்டி வழியாக வருதல்). இரவு சமுத்திராபட்டியில் இரண்டாம் நாள் பூஜை. நெற்குப்பை, மேலைச்சிவபுரியிலிருந்து, முறைகாரருடன், வேல் துணை கொண்டு காவடிகளும் பாதயாத்திரீகர்களும் புறப்படுதல். |
| 4உ 18–1–08 (வெ) | காலை நத்தத்தில் வாணியர் பஜனை மண்டபத்தில் பானக பூஜை. பகல் உப்பாற்றில் காவடி நிவேத்தியம். இரவு இடைச்சி மடத்தில் மூன்றாம் நாள் பூஜை. நெற்குப்பை, மேலைச்சிவபுரி காவடிகள் சமுத்திராப்பட்டியில் தங்கல். |
| 5உ 19–1–08 (ச) | காலை திண்டுக்கல் அபிராமி அம்மன் கோவிலில் காவடி தங்கி, பகல் ரெட்டியார் சத்திரத்தில் காவடி நிவேத்தியம். இரவு நகரத்தார் ஊருணி என்கிற **செம்மடைப்பட்டியில் ஊஞ்சல்**. நான்காம் நாள் பூஜை. |

| | |
|---|---|
| 6உ 20–1–08 (ஞா) | காலை செம்மடைப்பட்டியில் பானக பூஜை–நெற்குப்பை. மேலைச்சிவபுரி பாதயாத்திரை அன்பர்கள் பலர் சேர்ந்து கொள்வார்கள். பகல் (ஒட்டன்சத்திரம் கடந்து) குழந்தைவேலன் சன்னதியில் காவடி நிவேத்தியம் இரவு அடையாள வேலை தரிசித்து கலிங்கப்பையா ஊருணியில் (சத்திரப்பட்டிச் சாலையில்) ஐந்தாம் நாள் பூஜை. |
| 7உ 21–1–08 (தி) | காலை ஆயக்குடி பெருமாள் கோவிலில் பானக பூஜை. நெற்குப்பை மேலைச்சிவபுரி காவடிகளும் பாதயாத்திரை அன்பர்களும் வந்து சேர்வார்கள். பகல் இடும்பன்குளத்தில் நீராடி இடும்பன் மலைச்சாரியில் காவடி நிவேத்தியம் இரவு காவடி அழைத்தல். பழநி அன்னதான மடத்தில் முதல் நாள் பூஜை. |
| 8உ 22–1–08 (செ) | **தைப்பூசம்**. அன்னதான மடத்தில் இரண்டாம் நாள் பூஜை. |
| 9உ 23–1–08 (பு) | அன்னதான மடத்தில் மூன்றாம் நாள் பூஜை. |
| 10உ 24–1–08 (வி) | அன்னதான மடத்தில் நான்காம் நாள் பூஜை. மகம் நாளான இன்று பகல் இரண்டு மணிக்குமேல் புறப்பட்டு மலையில் **காவடி செலுத்துதல்**. |
| 11உ 25–1–08 (வெ) | அன்னதானமடத்தில் ஐந்தாம் நாள் பூஜை. தனியார் அபிஷேகங்கள். **பழம்நீ** பாதயாத்திரைக் குழுவின் சார்பில் பழநி அடிவாரம் பட்டக்காரர் மடத்தில் மதிய உணவு. |
| 12உ 26–1–08 (ச) | அன்னதான மடத்தில் அடுப்படிப் பூஜை. சுவாமி புறப்பாடு. தனியார் அபிஷேகங்கள். |
| 13உ 27–1–08 (ஞா) | மாலையில் மலையில் சந்தனக் குழம்பு அபிஷேகம் பாதயாத்திரிகர்கள் விடைபெற்று ஊர் திரும்புதல். |
| 14உ 28–1–08 (தி) | மாலை ஆறு மணி அளவில் காவடி விடைபெற்று ஊர் திரும்புதல். |
| 15உ 29–1–08 (செ) | காவடி வழி நடையாக ஊர் திரும்புதல். பகல் திண்டுக்கல் மலைக்கோட்டை ஐயப்பன் கோவிலில் பூஜை. |
| 16உ 30–1–08 (பு) | காவடி வழி நடையாக ஊர் திரும்புதல். இரவு சமுத்திராபட்டியில் பானக பூஜை. நெற்குப்பை–மேலைச்சிவபுரி காவடிகள் இங்கிருந்து விடைபெற்றுச் செல்வார்கள். |
| 17உ 31–1–08 (வி) | காவடி வழி நடையாக ஊர் திரும்புதல். இரவு மருதுபட்டித் தோப்பில் பூஜை (மேலைச்சிவபுரியில் அவர்களுடைய வேலுக்குப் பால் அபிஷேகம்) |
| 18உ 1–2–08 (வெ) | திருப்புத்தூர் வழியாக காலை ஏழு மணியளவில் குன்றக்குடி வந்தடைதல். இரவு பூஜை. |
| 19உ 2–2–08 (ச) | குன்றக்குடியிலிருந்து புறப்பட்டு அவரவர் ஊர் வந்து சேர்தல். |

**சுபம்**



## விநாயகர் துதிகள்

ஆடியபாதா நீடிய கருணை ஆனைமுகத்தோனே
தேடிய போது ரகசியமுடனே சீக்கிரம்நீ வருவாய்
பாடிய நாவும் சூடிய தமிழும் பகரும் பெருமாளே
நாடிய சூடிய நாவிலு கந்தருள் நல்லவி நாயகனே!

மங்களத்து நாயகனே மண்ணாளும் முதலிறைவா!
பொங்குதன வயிற்றானே பொற்புடைய ரத்தினனே
சங்கரனார் தருமதலாய் சங்கடத்தைச் சங்கரிக்கும்
எங்கள்குல விடிவிளக்கே எழில்மணியே கணபதியே!

அப்பமுடன் பொரிகடலை அவலுடனே அருங்கதலி
ஒப்பிலா மோதகமும் ஒருமனமாய் ஒப்பித்து
எப்பொழுதும் வணங்கிடவே எனையாள வேண்டுமென
அப்பனுக்கு முந்திவரும் அருட்கனியே கணபதியே!

பிள்ளையாரின் குட்டுடனே பிழைநீக்க உக்கியிட்டு
எள்ளளவும் சரியாத எம்மனத்தை உமக்காக்கித்
தெள்ளியனாய்த் தெளிவதற்குத் தேன்தமிழில் போற்றுகின்றேன்
உள்ளியதை உள்ளபடி உகந்தளிப்பாய் கணபதியே!

இன்றெடுத்த இப்பணியும் இனித்தொடரும் எப்பணியும்
நன்மணியே சண்முகனார் தன்னுடனே நீஎழுந்து
என்பணியே உன்பணியாய் எடுத்தாண்டு எமைக்காக்க
பொன்வயிற்றுக் கணபதியே போற்றியெனப் போற்றுகின்றேன்!

## சிவன் துதி

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்த்திங்கள் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே!

## மீனாட்சி துதி

பங்கயற்குஅண்ண அரியபரம் பரன்உருவே
தனக்குரிய படிவம் ஆகி,
இங்கு அயற்கண் அகன்உலகம் எண்ணிறந்த
சராசரங்கள் ஈன்றும், தாழாக்
கொங்கை, அற்கண், மலர்க்கூந்தல், குமரி,பாண்
டியன்மகள்போல் கோலம் கொண்ட
அங்கயற்கண் அம்மைஇரு பாதப்போது,
எப்போதும் அகத்துள் வைப்பாம்!

## திருமால் துதி

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் வாயில்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே!

## சரஸ்வதி துதி

வெள்ளைக்கலை யுடுத்து வெள்ளைப்பணி பூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் – வெள்ளை
அரியா சனத்தில் அரசரோடு என்னைச்
சரியாசனம் வைத்த தாய்.

## திருமகள் வழிபாடு

பொன்னிலும் மணிகளிலும் – நறும்
பூவிலும் சாந்திலும் விளக்கினிலும்
கன்னியர் நகைப்பினிலும் – செழுங்
காட்டிலும் பொழிவிலும் கழனியிலும்
முன்னிய தணிவினிலும் – மன்னர்
முகத்திலும் வாழ்ந்திடும் திருமகளைப்
பன்னிநற் புகழ்பாடி – அவள்
பதமலர் வாழ்த்திநற் பதம்பெறுவோம்.

## வைரவர் வழிபாடு

விரித்தபல் கதிர்கொள் சூலம்வெடிபடு தமருகம்கை
தரித்ததோர் கோலாகல பைரவன் அகிவேழம்
உரித்துஉமை அஞ்சக்கண்டு ஒண்திரு மணிவாய்விள்ள
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே!

## ஸ்ரீ வெங்கடேசன்

*ஆதிசேஷா அனந்தசயனா*
*ஸ்ரீநிவாசா ஸ்ரீவெங்கடேசா*

வைகுண்ட நாதா வைதேகி ப்ரியா
ஏழுமலை வாசா எங்களின் நேசா (ஆதி)
வேணு விலோலனா விஜய கோபாலா
நீலமேக வண்ணா கார்மேகக் கண்ணா (ஆதி)
காளிங்க நர்த்தனா கமனீய கிருஷ்ணா
கோமள வாயனா குருவாயூ ரப்பனா (ஆதி)
ஸ்ரீராமச் சந்திர மூர்த்தியைப் பாடு
தீவினை யகல அவன்திருவடி நாடு (ஆதி)
பாவங்கள் போக்கப் பஜனைகள் செய்வோம்
பார்த்த சாரதியின் பாதம் பணிவோம் (ஆதி)
திருப்பதி மலையில் திருமுகம் காட்டும்
திருவேங் கடத்தான் திருவருள் பெறுவோம் (ஆதி)
ஸ்ரீரெங்க நாதன் பள்ளி கொண்டிருக்கும்
ஸ்ரீரெங்கம் சென்று திருவடி பணிவோம்! (ஆதி)

## செந்தாமரை மலரில்...

செந்தா மரைமலரில் திகழ்கின்றவள்
ஸ்ரீரங்க நாதனொடு மகிழ்கின்றவள்! (செந்தாமரை)
சந்தான சௌபாக்யம் தருகின்றவள்
தட்டாமல் ஓடோடி வருகின்றவள்! (செந்தாமரை)
வற்றாது பால் வழங்கும் பசுவானவள்
மடிமீதில் உறவாடும் சிசுவானவள்
கற்றார்க்கும் கல்லார்க்கும் உயிரானவள்
கண்போகும் இடம்எங்கும் பயிரானவள்! (செந்தாமரை)
நன்செய்யும் புன்செய்யும் தானானவள்
நவதான்யப் புலம்எங்கு மானானவள்
பொன்செய்யும் வேளாளர் கரமானவள்
புவியோரை வாழ்விக்கும் வரமானவள்! (செந்தாமரை)

*- அருட்கவி கு.செ. இராமசாமி*

## உலகாளும் மகாசக்தி

கோரஸ் :

"ராஜேஸ்வரி – அம்மா – பரமேஸ்வரி
புவனேஸ்வரி – அம்மா – ஜகதீஸ்வரி"

ஸ்ரீசக்ர பீடத்தில் ராஜேஸ்வரி
சிவசக்தி ரூபத்தில் பரமேஸ்வரி
ஓம்சக்தி ஓம்சக்தி புவனேஸ்வரி
உலகாளும் மாசக்தி ஜகதீஸ்வரி!

அருளாளர் நெஞ்சங்கள் சிம்மாசனம்
அறுபத்து நான்குகலை வெண்சாமரம்
ஒருநான்கு வேதங்கள் சங்கீர்த்தனம்
ஓங்காரநாதம் அம்மாஉன் தாண்டவம்!

பூவுக்கும் பொட்டுக்கும் துணையானவள்
பொன்மஞ்சள் குங்குமத்தில் நிலையானவள்
சேவிக்கும் பெண்களுக்குத் தாயானவள்
திருமாங்கல்யம் என்னும் வாழ்வானவள்!

குளம்போல நெய்யூற்றி விளக்கேற்றுவோம்
கும்பத்தின் பிம்பத்தில் குடியேற்றுவோம்
வளம்யாவும் தரவேண்டி மலர்தூவுவோம்
மகராணி நீயென்று கவிபாடுவோம்!

தீபத்தில் குடிகொண்ட ராஜேஸ்வரி
திலகத்தில் முகம்காட்டும் ராஜேஸ்வரி
ஆபத்தில் ஓடிவரும் ராஜேஸ்வரி
அருள்செய்ய வேண்டும்அம்மா நீயேகதி!

*அருட்கவி கு.செ. இராமசாமி*

## எந்நாளும் காப்பாயம்மா

கோரஸ் :

"ஸ்ரீராஜ ஸ்ரீராஜ ராஜேஸ்வரி
சிவசக்திவடிவான ராஜேஸ்வரி"

ஸ்ரீசக்ர வாசினி சிம்மாசனி
சிவசக்தி ரூபிணி கல்யாணிநீ
ஓம்சக்தி ஸ்ரீராஜ ராஜேஸ்வரி
உன்பாதம் சரணடைந்தேன் மகேஸ்வரி! (ஸ்ரீராஜ)

இருகைகளால் தொடுத்த பூமாலைகள்
இதயத்தினால் தொடுத்த பாமாலைகள்
அருள்பொங்கும் தீபங்கள் ஏற்பாயம்மா
அடியேனை எந்நாளும் காப்பாயம்மா! (ஸ்ரீராஜ)

அம்மாஎன் இல்லத்தில் அடியெடுத்துவா
அழகான வெண்கொற்றக் குடைபிடித்துவா
சும்மாநீ வரலாமோ பகைமுடித்துவா
துயரங்கள் யாவினுக்கும் விடைகொடுத்துவா! (ஸ்ரீராஜ)

செந்தா மரைப் பூவில் ஸ்ரீதேவியாம்
சிங்கத்தில் ஏறிவந்தால் மாகாளியாம்
வெண்தா மரைப்பூவில் மகராணியாம்
விண்ணோடும் மண்ணாளும் கலைவாணியாம்! (ஸ்ரீராஜ)

தீர்த்தங்கள் அத்தனையும் கமலாலயம்
தீபம் தெரிந்தஇடம் அருணாசலம்
வாய்த்த சபைகள்எல்லாம் பொன்னம்பலம்
மாதா பராசக்தி நீஎன்பலம்! (ஸ்ரீராஜ)

தாய்நீ மனம்வைத்தால் தங்கம்வரும்
தனிவழிக்குத் துணையாகச் சிங்கம்வரும்
சேய்வீட்டில் கல்யாண மேளம்வரும்
திருநாட்டை அரசாளும் யோகம்வரும்! (ஸ்ரீராஜ)

*அருட்கவி கு.செ. இராமசாமி*

## தேவி மீனாட்சி உமையே!

நாவிலும் நான்பாடும் பாவிலும் குடியேறும்
நாயகி; அழகுராணி;
ஞானாதி காரி; நளினாசனி; கலாதரி;
நாதாந்த மானசக்தி;

ஓவியம் சிற்பமென ஓதும் கலைத்திறமை
ஒவ்வொன்றும் உதவும்வாணி;
ஓரவிழி யால்என்றன் ஈரவிழி ஏட்டிலே
உயர்கவிதை நல்கும்தேவி;

கூவும்என் பிள்ளை குரல்கேட்டுப் பாதசரம்
கொஞ்சவந் தருளும்காளி;
குமரி;பர மேஸ்வரி; அமரிஎன உன்னைநான்
கொண்டாடு வேன்!போற்றுவேன்!

தேவரோடு மூவர் சிரம்பதியும் திருவடிஎன்
சித்தமிசை வைத்தருளுவாய்!
தென்மதுரை அரசாளும் என்னரிய செல்வமே,
தேவிமீ னாட்சிஉமையே!

எங்கோ நெடுந்தொலைவில் உள்ளாய்என் றெண்ணுகையில்
என்னருகி லேநிற்கிறாய்!
என்னரு கிலிருக்கிறாய் எனஎண்ணும் வேளையில்
ஏன்விலகி ஓடுகின்றாய்?

இங்கேநின் கைகளை எதிர்பார்க்கும் வேளையில்
ஏமாற்றி அகலுகின்றாய்!
ஏதும்எதிர் பாராத போதுமழை மேகமாய்
ஈகைசெய் தருளுகின்றாய்!

தெங்கோடு வாழைகள் செழித்துவளர் சோலையில்
சிறைவிரித் தாடும்மயிலே!
சிறுபோதும் என்னைவிட் டகலாது வாழ்விக்கத்
திருவுளம் இரங்குமகளே!

சிங்காத னம்,சேனை, பரிவாரம் குறையாத
சிவராஜ தானிஅரசே!
தென்மதுரை அரசாளும் என்னரிய செல்வமே,
தேவிமீ னாட்சிஉமையே!

– அருட்கவி கு.செ. இராமசாமி

## நீ என் கண்மணி

மூகாம்பிகே – தாயே – மூகாம்பிகே
முன்வந்து காப்பாயே மூகாம்பிகே! (மூகாம்பிகே)

ஏகாம்பிகே – ராஜ – யோகாம்பிகே
இன்பங்கள் சேர்ப்பாயே மூகாம்பிகே! (மூகாம்பிகே)

ஸ்ரீசக்ர பீடத்தில் ராஜாங்கமாம்
ஜெகம் ஏழும்உன் அதிகாரமாம்
ஓம்சக்தி நாதத்தில் அபிஷேகமாம்
உள்ளன்பே நீகொள்ளும் நைவேத்யமாம்! (மூகாம்பிகே)

மணியோசை வாவென்று மொழிகின்றது
மனம்எங்கும் அமுதாகப் பொழிகின்றது
அணையாத கற்பூரம் எரிகின்றது
அதிலேஉன் திருமேனி தெரிகின்றது! (மூகாம்பிகே)

பொல்லாத பிள்ளைக்கும் பால்தந்தவள்!
புரியாத பேதைக்கும் வாய்தந்தவள்
அல்லாத செயல்கண்டும் தள்ளாதவள்
அருளன்றி வேறொன்றும் இல்லாதவள்! (மூகாம்பிகே)

வரையாது தரவல்ல சிந்தாமணி
மௌனத்தில் விடைசொல்லும் கலைமாமணி

அரசாளும் மகராணி சிம்மாசனி
அருள்செய்வாய் அம்மாநீ என்கண்மணி! (மூகாம்பிகே)

அஞ்சாதே என்றேநீ கைகாட்டுவாய்
அகவாழ்வும் புறவாழ்வும் நலமாக்குவாய்
நெஞ்சாரத் துதிசொன்னேன் முன்னேற்றுவாய்
நிலையான பெருவாழ்வில் எனை–ஏற்றுவாய்! (மூகாம்பிகே)

*- அருட்கவி கு.செ. இராமசாமி*

## நாராயணா - நாராயணா

(பஜன்)

நாராயணா – ஹரி – நாராயணா
நாராயணா – லக்ஷ்மி – நாராயணா (நாராயணா)

ஆதி கேசவா, சேது மாதவா,
ஆயன் யாதவா நாராயணா!
வேத காரணா, கீத பூரணா,
விஷ்ணு ஸ்ரீதரா நாராயணா! (நாராயணா)

நந்த நந்தனா, பக்த சந்தனா,
ஞான பந்தனா நாராயணா!
மந்த மாருத இந்து சீதள
வதன சுந்தரா நாராயணா! (நாராயணா)

சக்ர பாணியே, சங்க தாரியே,
சாந்த ரூபியே நாராயணா!
மச்ச கூர்ம வராக சிம்மமாய்
வந்த சுவாமியே நாராயணா! (நாராயணா)

சீதை மன்னவா, கீதை சொன்னவா,
ஸ்ரீ–ஸ்ரீநி வாச நாராயணா!
ராதை நாயகா, கோதை காதலா,
ராஜ கோபால நாராயணா! (நாராயணா)

கவிகள் வாக்கிலே, ரிஷிகள் நோக்கிலே
கண்ட மந்திரம் நாராயணா!
செவிகள் குளிரவும், சிந்தை மலரவும்,
செப்பு வோம்தினம் நாராயணா! (நாராயணா)

*- அருட்கவி கு.செ. இராமசாமி*

## விநாயக சப்தகம்

குருவே பரமன் கொழுந்தே பணிந்தேன்
குவலயம் போற்றும் கணநாதா!
வருவாய் நினைவில் வந்தெனை ஆள்வாய்
வடிவே லவனின் சோதரனே!
அருள்வாய்! உனையே அனுதினம் பணிவேன்
அன்னை பராசக்தி அருள்மகனே!
திருமால் மருகா! திருவடி சரணம்!
தீன ரட்சகனே கணநாதா!

ஆனையின் அன்பன் அழகு முருகனின்
அண்ணனாய் உலகில் அவதரித்தாய்!
ஆனைமு கத்தொடு ஐங்கரங் கொண்டதோர்
அற்புத வடிவே! கணநாதா!
யானென தென்னும் எண்ணங்கள் நீக்கி
இகபர சுகமதை எனக்களிப்பாய்!
யானுனை என்றும் இராப்பகல் தொழுதேன்
என்துயர் களைவாய்! கணநாதா!

குஞ்சரனே! எழிற் குஞ்சரி நாதனாம்
குகசர வணபவ சோதரனே!
வெஞ்சம ரெதிலும் வெற்றியே தருவாய்
வேழமு கத்தோய் கணநாதா!
அஞ்சிடும் அன்பருக் கபயம் அளிப்பாய்
அரவணைத் தெனையும் ஆண்டருள்வாய்!
பஞ்சமி! பைரவி! பர்வதி புத்திரி!
பார்வதி மைந்தா! கணநாதா!

வல்லபை நாதா! விக்ன வினாயகா
வாழ்த்திப் பணிந்தேன் உன்பதமே!
வல்வினை எல்லாம் வலிமை இழந்தே
வாடிடச் செய்வாய்! கணநாதா!
தொல்வினை யாலிவன் துயருறும் அடியேன்
துன்பமெலாம் நீ துடைத்திடுவாய்!
அல்லொடு பகலும் அனவரதமும் உன்
அடியினை தொழுவேன் கணநாதா!

வானொடு நீரும் வளியும் தீயும்
வையகம் யாவும்உன் வடிவே!
மானிட வாழ்வை மகிழ்வுறச் செய்வாய்
மங்கலப் பொருளே கணநாதா!
தேனோடு பாலும் தெங்கொடு பழமும்
தெவிட்டா அமுதம்தினம் படைப்பேன்
ஊனொடு உயிரும் உணர்வும் புரப்பாய்!
உன்னடி தொழுதேன் கணநாதா!

ஓமெனும் வடிவே உன் வடிவாமென
உலகிற்கெலாம் நீ உணர்த்திடுவாய்!
ஆம்எனச் சொல்வாய்! அன்னை குமாரா
ஆதரித்தருள் வாய்! கணநாதா!
ஓமெனும் ஒலியில் உன்குரல் கேட்டே
உளமகிழ்ந்துன் புகழ் பாடிடுவேன்
ஓமெனும் பொருளே உமையவள் பாலா!
ஒருபரம் பொருளே! கணநாதா!

சங்கரன் மகனே! சஞ்சலம் தீர்ப்பாய்
சக்தி குமாரா! கணநாதா!
ஐங்கரனே! உன் அடியினை தொழுதேன்
அடைக்கலம் நீயே கணநாதா!
சங்கரித் திடுவாய் சங்கட மெல்லாம்
சம்பு குமாரா! கணநாதா!
சங்கரி மைந்தா! சந்ததம் பணிவேன்
சரணம்! சரணம்! கணநாதா!

போக்கும் வரவும் உயிர்திரியப்
புலையாம் செனனம் எடுத்தெடுத்துத்
தாக்கும் உதிரக் கருக்குழியில்
சலிக்கும் படிக்கோ எனைவிடுத்தாய்
கோக்கும் முகிலால் மயிலாட
நுவல்வா ணரங்கள் தென்னைமடல்
சாய்க்கும் மதுரப் பழநிநகர்த்
தலைவா! எவர்க்கும் தயாபரனே!

*- பழநி பதிற்றுப்பத்து அந்தாதி*

மதிமவுலி மார்பில் வியைாடும் கமலம் கவுரி
மழதனில் உதித்த கமலம்
வண்டமிழ்ச் சங்கத்திலிருந்த கமலம் பிரமன்
வந்தனைகள் செய்த கமலம்
அதிகவிதை அருணகிரி சூட்டும் கமலம் தெய்வ
யானை குறவாச கமலம்
அணிமணி திருத்திப் புனைந்த கமலம் பணிசெய்
அடியார்வினை மாற்று கமலம்

கதிர்முலைக் குறமங்கை தினைவனப் புற்களும்
கற்களும் உறுத்து கமலம்
கானமயில் ஏறி விளையாடு சூரர்
கணங்கள் கொண்டாடு கமலம்
பதிதனாம் என்னுடைய வன்மனமெனும் கரும்
பாறையில் முளைத்து அலருமோ?
பழமறை சொலியசீல! தொழும் அவர்கள் அனுகூல!
பழநிமலை வடிவேலனே!

*- பழநிமலை வடிவேலர் சந்நிதிமுறை*



# கோளறு திருப்பதிகம்

வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தென்
உளமேபுகுந்த அதனால்
ஞாயிறுதிங்கள் செய்வாய்புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரண்டுமுடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே (1)

என்பொடு கொம்பொடாமை யிவைமார் பிலங்க
எருதேறி ஏழை யுடனே
பொன்பொதி மத்த மாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றோடேழு பதினெட்டொடாறும்
உடனாய நாள்கள் அவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே (2)

உருவளர் பவளமேனி ஒளிநீ றணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
திருமகள் கலைய தூர்தி செயமாது பூமி
திசைதெய்வம் ஆன பலவும்
அருநெதி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே (3)

மதிநுதன்மங்கையோடு வடபால் இருந்து
மறையோதும் எங்கள் பரமன்
நதியொடு கொன்றைமாலை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்

கொதியுறு காலன் அங்கி நமனோடு தூதர்
கொடுநோய்களான பலவும்
அதிகுணம் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே (4)

நஞ்சணி கண்டன் எந்தை மடவாள்தனோடும்
விடையேறும் நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடும் உரும்இடியும் மின்னும்
மிகையான பூதம் அவையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவைநல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே (5)

வாள்வரி அதளதாடை வரிகோவ ணத்தர்
மடவாள்த னோடும் உடனாய்
நாள்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
கோளரி உழுவையோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே (6)

செப்பிள முலைநன் மங்கை ஒருபாகமாக
விடையேறு செல்வன் அடைவார்
ஒப்பிள மதியும் அப்பும் முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும் வாதம் மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்லநல்ல அவைநல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே (7)

வேள்பட விழிசெய்தன்று விடைமேல் இருந்து
மடவாள்த னோடும் உடனாய்
வாள்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழ் இலங்கை அரையன்த னோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே (8)

பலபல வேடமாகும் பரன்நாரி பாகன்
பசுவேறும் எங்கள் பரமன்
சலமக ளோடெருக்கு முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனும் மாலும் மறையோடு தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே (9)

கொத்தலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியும் நாகம் முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
புத்தரோ டமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவைநல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே (10)

தேனமர் பொழில் கொள் ஆலை விளை செந்நெல்துன்னி
வளர் செம்பொன் எங்கும் நிகழ
நான்முகன் ஆதியாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல் மாலைஓதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே (11)

## தையல்நாயகி பதிகம்

எள்ளுப்பூ மூக்கு! எழிற்குவளைப் பூக்கண்கள்!
இயல்பான அழகுவடிவம்!
இனியமும் தாமரை! இருசெவிகள் செந்தாழை!
இறைவிநிறம் நல்லபவளம்!
கள்ளிருக்கும் ரோஜாப்பூக் கன்னங்கள்! அல்லியில்
கடைந்ததோர் இரண்டுகால்கள்!
கைகளும் விரல்களும் கனகாம்பரம் மல்லி!
கற்பகப்பூவில் தோள்கள்!
புள்ளிருக்கும் வேளூர் பூவையுன் அங்கமெல்லாம்
பூக்களாய் மலர்ந்திருக்க!
பூவுடல் கொண்டவளை வர்ணித்துப் பாமாலை
பூமாலையோடு தந்தேன்!
வல்லவன் நின்அருளாலே வரும்துயரைப் போக்கியொரு
வரம்தந்து காக்கவருவாய்! – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 1

பால்கேட்டு அழுததோர் பிள்ளைக்குச் சீர்காழிப்
படித்துறையில் பால்கொடுத்தாய்!
பச்சைவெற் றிலைதுப்பிக் கவிகாள மோகத்தைப்
பாட்டரசன் ஆக்கிவைத்தாய்!
வேல்கேட்ட பிள்ளைக்கும் செந்தூரில் சமர்செய்ய
விருப்பமுடன் வேல்கொடுத்தாய்!
விளையாடும் ஏழரைச் சனியோடு கிரகங்கள்
விலகிடும் வழி அமைத்தாய்!
நூல்கேட்ட ஞானத்தில் நூறுகவி பாடுமெனை
நோக்கிநீ எதுகொடுத்தாய்?
நொடிப்பொழுதில் என்வாழ்வில் படிப்படியாய்த் துயரங்கள்
நுழைவதற்கு ஏன்விடுத்தாய்?
வாழ்வரசி இனிஎனது வருங்காலம் செல்வங்கள்
வளம்காலம் ஆக்கவருவாய்! – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 2

தாஎன்று கேட்டவுடன் தருவதால் தானுன்னைத்
தாய்என்று சொல்லிவைத்தார்
தலைமகள்உன் சந்நிதியில் கலைமகளின் அருளாலே
தமிழ்பாடி வரங்கள்பெற்றார்
சேய்ஒன்று எதிரினிலே கதறுவது கேட்காமல்
செவிமூடி நிற்கலாமோ ?
சிறுபிழைகள் இருந்தாலும் மன்னித்து அருள்காட்டும்
தேவியவள் நீயல்லவோ ?
ஆயகலை அத்தனையும் அறிந்தவனை நோயநொடிகள்
அணுகவிடல் முறையாகுமோ ?
அரியதொரு செல்வத்தை உரியமகன் ஏற்காமல்
அனுதினமும் வாடலாமோ ?
வாயுவென வேகமாய் வந்தெனது துயர்தீர்த்து
மகிழ்ச்சியினைக் கொடுக்கவருவாய் – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 3

தங்கநிகர் குணத்தோடு தைரியமும் தருகின்ற
தமிழ்ச்செல்வி போற்றிபோற்றி
தரணியில் புகழ்காண வரமளிக்கும் சுந்தரியாம்
தாமரைப்பூ மாதுபோற்றி
மங்கையர்க்கு மாலைகளும் மன்னவர்க்கு வேலைகளும்
மகிழ்ந்தளிக்கும் அரசிபோற்றி
மாதரசி உண்ணா மலைஅழகு சிவகாமி
மங்கை மீனாட்சிபோற்றி
பொங்கிவரும் துயரத்தைப் பொடியாக்க ஓடிவரும்
அன்னபூரணி கல்யாணிபோற்றி
யோகமுடன் வாழ்வுதரும் பூங்கொடியாம் விசாலாட்சி
புனிதஉமா தேவிபோற்றி
மங்களங்கள் அத்தனையும் எங்களது வீடுவர
மாதரசி கூட்டிவருவாய் – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 4

மலைபோன்ற செல்வத்தைக் குவித்துவைத் திருந்துநான்
மற்றவர்க்கு உதவவேண்டும்
மழலையின் குணத்தோடு முதுமையிலும் இளமையாய்
மகிழ்வோடு வாழவேண்டும்
கலைதவழும் மேடையெலாம் பூமாலை அணிந்துநான்
கௌரவம் காணவேண்டும்
கவிபாடும் எனதுகுரல் கேட்டவுடன் தெய்வமெல்லாம்
காட்சிதந்து அருளவேண்டும்
நிலையான புகழ்தந்து உற்றாரும் மற்றாரும்
நேசிக்கும் உறவுவேண்டும்
நீஎனது துணையாகி நான்செல்லும் பாதைக்கு
நேர்வழிகள் காட்டவேண்டும்
வளையாடும் கரத்தழகி பகைவென்று எந்நாளும்
மறுக்காமல் காக்கவருவாய் – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 5

சிறுவயதில் உன்பெருமை தெரிந்திருந்தா லுன்னைச்
சேவித்து மகிழ்ந்திருப்பேன்
தெரியாமல் செய்தபிழை அத்தனையும் மன்னிக்கத்
தேடிவந் தழுதிருப்பேன்
புரியாமல் எடுத்தயிப் பிறவிதனில் மங்கையரின்
போகத்தை அளந்திருந்தேன்
பொன்னோடும் பெண்ணோடும் வருமின்பம் போதுமெனப்
புரியாமல் வாழ்ந்திருந்தேன்
திருநாளில் உன்பெருமை தெரிந்ததும் தொடர்ந்துநான்
செவ்வாயில் விரதம்வைத்தேன்
தித்திக்கும் அருள்தன்னை சித்திக்க வரம்வேண்டி
சிங்காரப் பாட்டிசைத்தேன்
பருவத்தில் நான்செய்த பாவத்தை மன்னித்துப்
பாவைநீ காக்கவருவாய் – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 6

திருக்கழுக் குன்றத்தில் கழுகுக்கும் மதியத்தில்
தினந்தோறும் சோறுஉண்டு
திருநாளாம் பொங்கலில் நந்தியெனும் காளைக்கும்
தித்திக்கும் பொங்கல்உண்டு
வருஷத்தில் ஒருநாளில் வடையோடு அன்னத்தை
வைரவரும் காண்பதுண்டு
வளர்கின்ற புற்றுக்குள் ஒளிகின்ற பாம்புக்கும்
வார்க்கின்ற பாலுமுண்டு
அர்ச்சித்து வழிபட்டு அன்னையே உனையென்னும்
அடியேனுக் கென்னஉண்டு
அன்றுதினம் அளந்தபடி என்றைக்கும் நடந்திடவே
அருள்புரிய வேண்டும்அம்மா
மரம்வைத்த நீதானே தண்ணீரும் விடவேண்டும்
மறந்திடல் முறையாகுமா – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 7

கழுதையெனும் பிறவியை எடுத்தாலோ நிச்சயம்
கழுத்திலே பொதியிருக்கும்
காளை மாடாகவே பிறந்திடின் நிச்சயம்
கழனியில் கால்இருக்கும்
பழுதான பிறவியாம் நாயாகப் பிறந்தாலோ
பகலிரவு விழிக்கவேண்டும்
பறவையாய்ப் பிறந்தாலும் மரங்களின் உச்சியில்
பதியங்கள் போடவேண்டும்
அழுதாலும் தொழுதாலும் அன்னையே உனையன்றி
யாரெனக் குதவுவார்கள்?
ஆறறிவு கொண்டதோர் மனிதனாய் என்னைநீ
அகிலத்தில் படைத்தபின்னால்
வழிகாட்ட மறப்பதும் நியாயமா? என்விழியில்
வழிந்து நீர்ஓடலாமா? – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 8

புல்லாகிப் பூடாகி புழுவாகி இருந்தாலோ
புலம்பியே தீரவேண்டும்
பொன்னாக அணிகின்ற மனிதனாய்ப் பிறந்தநான்
புதுயுகம் காணவேண்டும்
கல்லாக நிற்கின்ற தெய்வம்நீ இல்லையெனக்
காட்டிட விரைந்துவருக
கனதனம் நீதந்து காசினியில் புகழ்தந்து
காவலாய் நின்றுஅருள்க
முள்ளாக மலராக மோதிடும் வாழ்க்கையில்
முற்றும்நான் நம்பிவந்தே
மோதகப் பிரியனின் தாயான உன்னிடம்
முறையீடு செய்கின்றேன்
பல்லக்குப் பரிவாரம் பார்த்திடும் ராஜாங்க
பவனியை எனக்குஅருள்க – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 9

எவருக்கு எதுவேண்டும் என்பதை அறிந்தநீ
ஏறிட்டுப் பார்க்கவில்லை
இருகரம் கூப்பியுன் சந்நிதியில் நிற்கும்நான்
எதுகேட்டும் மாறவில்லை!
சிவல்புரியில் வாழ்கின்ற சிங்காரம் தந்ததோர்
செந்தமிழ் கவிதைமூலம்
சீர்கொண்ட பதிகங்கள் பத்தையும் கேட்டுநீ
சிரமத்தை அகற்றவேண்டும்
கவலைக்கு மருந்தாகும் கடவுளே உனைநம்பி
காலங்கள் போக்கிவிட்டேன்
காப்பாற்ற வேண்டியது உன்பொறுப் பல்லாது
காசினியில யார்பொறுப்பு ?
மகன்கேட்டு தாய்எதுவும் மறுப்பதில் முறையில்லை
மனமிரங்கி வந்துஅருள்க – அம்மா
வைத்தீஸ் வரன்கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும்உமையே! 10

*– எண்கலை வித்தகர் கவிஞர் சிவல்புரி சிங்காரம்*

# செந்தில் ஆண்டவன் தரிசன மகிமை

வீதிசுற்றிக் கீழ்புறமும் கடலுங் கண்டேன்
விஸ்தாரக் கொடிமரமு மங்கே கண்டேன்
ஆதியெனும் மூலமதை அங்கு கண்டேன்
அடியேனும் செந்தில்நகர் வலமாய் வந்தேன்
நீதிபுகழ் கோபுரமேற் புறத்திற் கண்டேன்
நிச்சயமாய் உனதழகைக் காண வேண்டி
ஆதியெனுங் கடற்கரையில் வந்து நின்று
அதிரூப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 1

மந்தாரை பிச்சிமுல்லை வனமும் கண்டேன்
மணல்மேட்டு குவட்டழகு மலையுங் கண்டேன்
வந்தவர்நோய் பிணிதீர்க்கும் வளமுங் கண்டேன்
வருந்துகின்ற அடியார்க்கு வரமீயக் கண்டேன்
சிந்தா நவமணிவிளக்கு ஒளியுங் கண்டேன்
திருச்செந் தூராதிபனைக் காண வென்று
அந்திரமாய்க் கடற்கரையில் வந்து நின்று
அதிரூப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 2

நாழிநல்ல கிணறுதன்னை நானுங் கண்டேன்
நன்மைபெறத் தீர்த்தமது ஆடிக் கொண்டேன்
வாழிசொல்லு மறையோர்கள் தன்னைக் கண்டேன்
மண்டபமுந் திருமதிலுஞ் செந்தூருங் கண்டேன்
கோழியெனுஞ் சேவல்மயில் தன்னைக் கண்டேன்
குமரனிரு தாளிணையைக் காண வென்று
ஆறுதலாய் கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 3

மூன்றுசுத்து மண்டபமுஞ் சுற்றிப் பார்த்தேன்
முன்னாலே வீரபத்ரன் தன்னைக் கண்டேன்
நானுமே மலைக்குடவு பெருமாள் கண்டேன்
நல்லவள்ளி சன்னதியும் பிறகு கண்டேன்

தேனுடன் பாலாபிஷேகம் செய்யக் கண்டேன்
சிவனார்தம் பாலகனை காண வென்று
ஆனதொரு கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 4

ஆறுமுக நயினார் தன்னழகு கண்டேன்
அவருடைய சண்முகவி லாசங் கண்டேன்
கூறுமடி யார்கள் வினைதீர்க்கக் கண்டேன்
குன்றுருவ வேல்வாங்கி நிற்கக் கண்டேன்
வேறுவினை யணுகாம லிருக்கக் கண்டேன்
வேலவனார் தம்பதத்தைக் காண வென்று
ஆறுதலாய் கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 5

மங்களம்சேர் தெய்வானைத் தன்னை கண்டேன்
மதகரியும் வாசலிலே வரவுங் கண்டேன்
பங்கயஞ்சேர் பன்னிருகை வேலுங் கண்டேன்
பதைக்கமுத்து சரப்பள்ளிகள் மேலுங் கண்டேன்
தங்கமய கோபுரத்தில் தீபங் கண்டேன்
சங்கரனார் பாலகனைக் காண வேண்டி
அங்கசங்கமான கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 6

மாசிமாதம் திருவீதி சுத்திவரவுங் கண்டேன்
மனிதர்க்கெல்லாம் மடத்திலன்னம் வழங்கக் கண்டேன்
தேசிக்காய்ச் சப்பரத்தின் சாயல் கண்டேன்
தினந்தினமும் பூச்சரங்கள் தூவக் கண்டேன்
வாசனையாம் பெரியோர்கள் தன்னைக் கண்டேன்
வள்ளியுட கணவனை நான் காணவென்று
ஆசையாய் கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 7

மாசிமகம் ரதமேறி வரவுங் கண்டேன்
மனிதரெல்லாம் கூடிவடம் பிடிக்கக் கண்டேன்
தேசிக்காய்ச் சப்பரத்தின் சாயல் கண்டேன்
திருவருளும் பூச்சரங்கள் தொங்கக் கண்டேன்
நீதிபுகழ் சண்முகவி லாசங் கண்டேன்
நிச்சயமாய் உனதழகைக் காண வேண்டி
ஆதியெனும் கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 8

கஞ்சமலர் தாளிணையை நானுங் கண்டேன்
கதிர்வேலுஞ் சூலமுமுன் கையிற் கண்டேன்
செஞ்சமதிர் வேதியர்சம் பத்துங் கண்டேன்
தினந் தினமும் சந்தனாபி ஷேகம் கண்டேன்
வஞ்சமெனும் மாயமதை நீக்கக் கண்டேன்
மனதறிய வுந்தனை நான் காணவேண்டி
அஞ்சலெனும் கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 9

செகத்திலுள்ளோ ருன்பாதம் பணியக் கண்டேன்
தினந்தினமும் மறையோர்கள் துதிக்கக் கண்டேன்
சுகத்திலேநா னடியேனி ருக்கக் கண்டேன்
துயரமெல்லா முன்பாதம் செல்லக் கண்டேன்
மகத்திலே ரதத்திலே வருமழகு கண்டேன்
மனதறிய உனதழகைக் காண வேண்டி
அகத்தியமாய் கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 10

வண்ணமயில் வாகனத்தில் வரவுங் கண்டேன்
மறையோர்கள் தினமுமன்னம் புசிக்கக் கண்டேன்
திண்ணமுடன் வள்ளிமனை தனையுங் கண்டேன்
தினந்தினமும் பள்ளியறை சேரக் கண்டேன்
கின்னரர்தம் பூர்வீணை முழங்கக் கண்டேன்
கிலேசமெல்லாம் தீர்ந்துவுன்னைக் காண வேண்டி
அன்னம்போல் கடற்கரையில் வந்து நின்று
ஆறுப தெரிசனங் கண்டருள் பெற்றேனே! 11

# அவனாசி பத்து

முன்னுரை :-

எண்பது ஆண்டுகளுக்கு முன்பு என் தந்தையார் இப்பாடல்களை அடிக்கடி பாடுவார்கள், துன்பமும் துயரமும் வந்தபோது மட்டுமல்ல, இன்பமும் மகிழ்ச்சியும் ஏற்படும் போதும் பாடுவார்கள். நானும் உடன்பாடித் தெரிந்து கொண்டேன். இப்பாடல்கள் எந்த நூலில் உள்ளதோ – இதன் ஆசிரியர் யாரோ – தெரியவில்லை – முருகன் தமிழின், தமிழரின், தமிழகத்தின் தெய்வம் – அவன் அழகன், வேலன், அன்பன்; தன்னை அழைத்தவர்க்கு ஒடோடி வந்து அருள்புரிவான் என்று கீழே உள்ள ஓலைச்சுவடி பழம் பாடல் கூறுகிறது. இப்பாடல்களை உளமுருகிப் பாடுங்கள். கந்தனை கடம்பனை முருகனை வேலனை பழனிக்குமரனை பாலகனை அய்யனை நினைந்து பாடுங்கள்; திரும்பத் திரும்பப் பாடுங்கள். உள்ளத்தூய்மையுடன் பாடுங்கள். அழையுங்கள். வருவான், கேளுங்கள் கொடுப்பான்.

துன்பம் மங்கி ஒளியும்
இன்பம் பொங்கி வழியும்.

*டாக்டர் கி.ஆ.பெ. விசுவநாதம்*

வற்றாத பொய்கை வளநாடு கண்டு
மலைமேலிருந்த குமரா
உற்றார் எனக்கு ஒருபேரு மில்லை
உமையாள் தனக்குமகனே
முத்தாடை தந்து அடியேனை யாளும்
முருகேசன் என்றனரசே!
வித்தார மாக மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 1

ஆலால முண்டோன் மகனாகி வந்து
அடியார் தமக்கும்உதவி
பாலூர(ல்) உண்டு கனிவாய் திறந்து
பயனஞ்செழுத்தை மறவேன்
மாலான வள்ளி தனைநாடி வந்து
வடிவாகி நின்றகுமரா!
மேலான வெற்றி மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 2

திருவாசல் தோறும் அருள்வே தமோத
சிவனஞ்செழுத்தை மறவேன்
முருகேச ரென்று அறியார் தமக்கு
முதலாகி நின்றகுமரா
குருநாத சுவாமி குறமாது நாதர்
குமரேச(ர்) என்றபொருளே!
மறவாமல் வெற்றி மயில்மீ திலேறி
வரமேணு மென்றனருகே! 3

உதிரந் திரண்டு பனியீர லுண்டு
உருவாசல் தேடிவருமுன்
ததிபோ லெழுந்த திருமேனி நாதர்
கடைவீடு தந்துமருள்வாய்
முதிரஞ் சிறந்த வயல்வீறு செங்கை
வடிவேல் எடுத்தகுமரா!
யதிராய் நடந்து மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 4

மண்ணாடு மீசன் மகனாரை யுந்தன்
மலைவீடுதந்து மருள்வாய்
வண்டூரல் பாயும் வயலூரில் செங்கை
வடிவேல் எடுத்தகுமரா!
நன்றாக வந்து அடியேனை யாண்டு
நல்வீடு தந்தகுகனே!
கொண்டாடி வெற்றி மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 5

நீலஞ் சிறந்த குறமாது வள்ளி
நின்பாகம் வைத்தகுமரா
கால னெழுந்து வெகுபூசை செய்து
கயிறுமெடுத்து வருமுன்
வேலும் பிடித்து அடியார் தமக்கு
வீராதி வீரருடனே
சாலப் பரிந்து மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 6

தலைகட்ட நூலின் நிழல்போல நின்று
தடுமாறி நொந்துஅடியேன்
நிலைகெட்டு யானும் புவிமீதில் நின்று
நெடுமூச்செறிய விதியோ
அலைதொட்ட செங்கை வடிவேற் கடம்பா
அடியேனை ஆளுமுருகா!
மலையேறி மேவு மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 7

வண்டுண்டு பூவில் மதுவூரில் பாயும்
வயலூரில் செங்கைவடிவேல்
கண்டொன்று சொல்லித் திரிவார்கள் வாசல்
கடனென்று கேட்கவிதியோ ?
வண்டுறு பூவி லிதழ்மேவும் வள்ளி
தெய்வானைக் குகந்தவேலா
நன்றென்று சொல்லி மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 8

விடதூத ரோடி வரும்போது உம்மை
வெகுவாக நம்பினேனே
குறமாது வள்ளி யிடமாக வைத்து
மயிலேறி வந்தகுமரா
திடமாகச் சோலை மலைமீதில் வாழும்
திருமால் தமக்குமருகா!
வடமான பழநி வடிவேல் நாதா
வரவேணு மென்றனருகே! 9

ஓங்கார சக்தி உமைபால் குடித்து
உபதேச முரைத்தபரனே!
பூங்கா வனத்தில் இதழ்மேவும் வள்ளி
புஜமீ திருந்தகுகனே
ஆங்கார சூரர் படைவீடு சேர
வடிவேல் விடுத்தபூபா
பாங்கான வெற்றி மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 10

ஆறாறு மாறு வயதான போது
அடியேன் நினைத்தபடியால்
வேறேது சிந்தை நினையாம லுந்தன்
ஆசாரசங்க மருள்வாய்
அசுரேசர் போல யமதூத ரென்னைத்
தொட்டோட கட்டவருமுன்
மாறாது தோகை மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 11

கையார உன்னைத் தொழுதேத்த மனது
கபடேது சற்றுமறியேன்
அய்யா உனக்கு ஆளாகும் போது
அடியார் தமக்குளளியேன்
பொய்யான காயம் அறவே ஒடுங்க
உயிர்கொண்டு போகவருமுன்
வையாளி யாக மயில்மீ திலேறி
வரவேணு மென்றனருகே! 12

ஏதேது ஜென்ம மெடுத்தேனோ முந்தி
யிந்தப் பிறப்பிலறியேன்
மாதாபி தாநீ மாயன் தனக்கு
மருகா குறத்திகணவா
காதோடு கண்ணை யிருளாக மூடி
உயிர்கொண்டு போகவருமுன்
வாதாடி நின்று மயில்மீ திலேறி
வரவேணும் மென்றனருகே! 13

## சமய மாலை

சீருலவுந் தென்பழநித் தண்டா யுதபாணிப்
பேருலவும் மாலைதனப் பிரபஞ்சத் திற்பாடப்
பாருலவும் மேருதனிற் பாரதத்தை நேர்வரைந்து
காருலவுந் தொந்திக் கணபதிதாள் காப்பாமே! 1

வையாபுரி நாட்டில் வளர்ந்திடுமென் அய்யனுக்கு
அய்யாயிரஞ் சரணம் அடிபணிந்து தெண்டனிட்டேன்
மெய்ஞ்ஞான தேசிகனே! வேலாயுதம் படைத்த
வையாபுரிக் கரசே! வருவாய் இதுசமயம். 2

ஆறாறு நூறாரு அஷ்ட மங்கலஞ் சூழ்ந்த
வீரா சிவகிரியின் வேலா யுதச்சாமி
சூராதி படைவென்ற சுப்பையா இப்போது
வாரா திருப்பதென்ன ? வருவாய் இதுசமயம். 3

தஞ்சமென்றே நின்பதத்திற் சரணம் புகுந்த என்றன்
நெஞ்சிற் கவலையெல்லாம் நீதீர்க்க வேணுமையா!
அஞ்சலென்று வந்தவாக்கு ஆதரவு சொல்லுமிப்போ
மஞ்சரி மணவாளா! வருவாய் இதுசமயம். 4

மங்கை நகரதனில் மறையோதும் வேதியராய்
அங்கசனைக் காய்ந்த அரனார் திருமகனே!
சங்கரநாராயணர் சொல் சண்முகனே கந்தையா
மங்கை வள்ளிபங்காளா! வருவாய் இதுசமயம். 5

ஏன்தான் முருகா இரக்கமில்லையோ உனக்கு ?
நான்தான் உரைப்பதுவும் நற்செவியிற் கேட்கிலையோ ?
சார்ந்தோடும் வாவித் தடாகமும் வையாபுரியின்
மாந்தோப்பும் விட்டு வருவாய் இதுசமயம். 6

ஜெகமே அளந்த அருள்திருமால் மருகோனே!
அகமே உருகுதையா ஆற்றுதற்கு நீயிரங்காய்
குகனே முருகையா குழந்தையைத் தேடியிப்போ
மகனே! எனஓடி வருவாய் இதுசமயம். 7

சின்னவய தென்றனது சிந்தை மெலிவதற்கு
என்னவிதிப் பயனோ ஏதறிய மாட்டேன்கேள்!
உன்னையே யான்துதித்து உன்பாத மேபணிய
வண்ணமயி லேறிய வருவாய் இதுசமயம். 8

தீராத நோய்களையும் தீர்த்துமே ஆளாக்கி
மாறாத செல்வமுறும் வரமெனக்கு நீயருளி
ஓராறு முகங்குளிர உத்தரவு நீகொடுக்க
வாராயோ கந்தா! வருவாய் இதுசமயம். 9

மார்க்கண்ட னுக்காக வளர்ந்தசொக்கலிங்கர் முன்னே
பார்க்குள் திருப்பணியைப் பான்மையாய்ச் செய்வதற்கே
ஆர்க்கு விரைந்தோ மெனவே அஞ்சலிட்டு சொல்லிவைத்த
மார்க்கமென்ன கந்தா? வருவாய் இதுசமயம். 10

கனத்தவுன் திருப்பணியைக் கட்டிவைத்த பேர்தமக்கு
நினைத்தபடி யேதான் நிறைவேற்ற வேணுமையா!
இனத்தார் நகைத்தென்னை ஏளனங்கள் செய்யாமல்
மனத்துயரந் தீர்க்க வருவாய் இதுசமயம். 11

உகந்த திருப்பணியை உண்டாக்கி எந்நாளும்
செகந்தனில் வாசகமாய்ச் செப்புதற்கு நீயிரங்காய்!
தகுந்த வசுராதிகளைத் தட்டழியக் கைவேலால்
வகுத்துவிட்ட கந்தா வருவாய் இதுசமயம். 12

நாடு நகரிழந்த ராஜாக்கள் போலவேநான்
வாடுவ துனக்கழகோ மனதும் இரங்கலையோ?
பேடைமயில் வள்ளியுடன் பெருத்த மயிலேறி
வாடையது துலங்க வருவாய் இதுசமயம். 13

சாதியுஞ் சமயமென்று தானினைத்துப் பாராமல்
நீதிபெற நெஞ்சினிலே நீஇருந்து கொண்டாட
ஏதுமறி யேனெனக்கு இவ்வேளை யேயருள
வாதுசெய வேண்டாம் வருவாய் இதுசமயம். 14

பருவகாலத் திலெண்ணிப் பாராமல் யான்செய்த
கருமவினையகலக் கனத்த திருக்கோயில் செய்தேன்
தருமங்கள் தானோங்கச் சாமிநீ கிருபை செய்ய
அருள்சிவ கிரிமுருகா! வருவாய் இதுசமயம். 15

கல்லா திருக்குங் கசடனெனக் கண்டாலும்
நல்லா தரவுசொல்லி ரட்சிக்க வேணுமையா!
எல்லோரும் கொண்டாட என்னிடத்தில் அன்புவைத்து
வல்லாளா! இப்போது வருவாய் இதுசமயம். 16

அடியார் வினையகற்றும் ஆறுமுகத் தெய்வமேகேள்
அடியேனும் உமக்கடிமை ஆகினேன் கிருபைசெய்வாய்
துடியாய் மயிலேறிச் சூரர்களைச் சங்கரிக்க
வடிவேற் கரகுமரா! வருவாய் இதுசமயம். 17

உச்சிதமாய் யானும் உனக்கே அபயமென்று
இக்கணமே என்னிடத்தில் இப்போது மேயெதிராய்ப்
பச்சைமயில் ஏறிவந்து பாலனெனை ரட்சிக்க
வச்சிரவேலாயுதனே! வருவாய் இதுசமயம். 18

சிங்கமுக அசுரன் சிரம்வீழ முன்னாளில்
செங்கையில் வேல் விடுத்த சேவற்கொடியோனே!
மங்கையரும் மோகிக்க மயில்வீரா! உன்றனது
மங்களதெய் வானையுடன் வருவாய் இதுசமயம். 19

பாலசமுத் திரஞ்சூழ் வயலுஞ் சிவகிரியாய்ப்
பாலனுனைத் தெரிசிக்கப் பரகதியைத் தாருமையா
மூலமென யானைசொல்ல முதலையைச் சங்கரித்த
மாலவர் மருகோனே! வருவாய் இதுசமயம்! 20

அண்டர்தொழுஞ் சொக்கருக்கு மைந்தராய் வந்துதித்த
கொண்டல் முருகா! எனது குலமுழுதும் உன்னடிமை
செண்டுமுலை வள்ளிதெய்வானைக் குகந்த கந்தா!
மண்டலங்கள் மெச்ச வருவாய் இதுசமயம். 21

ஞாலமதில் எந்நாளும் நம்பினே னுன்பாதம்
ஓலமென்றேன் என்முன்னே ஓடிவந்தா லாகாதோ?
பாலனெனக் குங்கிருபை பாலிக்க வையகத்தில்
வாலையருள் கந்தா! வருவாய் இதுசமயம். 22

சொக்கலிங்கர் மீனாட்சி சுந்தரர்க்கு முன்பாக
மிக்க திருப்பணியை விதவிதமாய் யான் நடத்த
பக்கத் துணையிருந்து பாலனெனை யேகாக்க
மைக்கண் வள்ளிபங்காளா! வருவாய் இதுசமயம். 23

குருமுனிக்கு நீகுருவாய் குவலயத்தில் வந்தருளும்
தருமனெறி தவறாச் சண்முகனே இப்போதும்
சிறுமை செய்யும்பிணியை சிதறடிக்க வேல்விடுத்தாய்!
வறுமையெல்லாம் தீர்க்க வருவாய் இதுசமயம். 24

அருணகி ரிக்கிரங்கி அரியபதந் தந்தவனே
தருமணறிந் திவ்வேளை சண்முகனே செய்கிருபை
கருணையுடன் நக்கீரன் கண்முன்வந்து காத்தவனே!
வருணதிசை முருகா! வருவாய் இதுசமயம். 25

பூரணமெய்ஞ் ஞானவருட் போகமுனி வோர்களுடன்
நாரணர யன்பரமர் நாடும் பரம்பொருளே!
காரணசித்தா! பழநிக் கந்தையா! சுந்தரஞ்சேர்
வாகனனின் சோதரனே! வருவாய் இதுசமயம். 26

வஞ்சனை பில்லிசூன்ய வைப்புங் கடப்பேவல்
நெஞ்சிரக்க மில்லாத நீசத்தொழிற் பேதனமும்
செஞ்சிலம்பின் நின்பாதத் தியானஞ் செயிலோடுமன்றோ!
வஞ்சநினை யாதேநீ! வருவாய் இதுசமயம். 27

கந்தா! குறமகளின் காந்தா! தெய்வானைமகிழ்
நந்தா மணிவிளக்கே! ஞானாதீ தப்பொருளே!
செந்தா மரைப்பதேனே! செவ்வேளே இவ்வேளை
வந்தா தரிக்கவென வருவாய் இதுசமயம். 28

நினதுகிரி ஆலயமேல் திகழ்கோ புரந்திருந்தி
அனவரத காலமுற வழகார் திருப்பணியும்
உனவெனவு மேவமைத்து முனையே தினந்தொழுதேன்!
வனவரத சண்முகனே! வருவாய் இதுசமயம். 29

கண்டனைக் காலாலுதைத்த சங்கரனார் தன்சுதனே!
தெண்டனிடு மன்பருளத் தருவே! செழுஞ்சுடரே!
தண்டுமொரு கையூன்றித் தென்பழநி நின்றோனே!
வண்டமிழின் பொற்றாளா! வருவாய் இதுசமயம். 30

சேரர்கோன் செய்துவைத்த திருவால யம்வெளியின்
நேரிலகு மண்டபமும் நீள்சுற்றும் மாமதிலும்
பேரிலக வேவமைத்துப் பேணுமடி யேனென்முன்
வரிலகு தேவியுடன் வருவாய் இதுசமயம். 31

முன்கோபு ரத்தூபி முன்மண்ட பங்களுடன்
நன்கோவி லுள்ளிலகு நற்கோபு ரம்புதுக்கிப்
பின்கோபுரப் பணியும் பேணறைகள் செய்தயென்முன்
வன்கோவே யான்காண வருவாய் இதுசமயம். 32

மெய்யாக நேர்பேசி விளையாடற் செய்ததெல்லாம்
பொய்யோ ? நீ இப்போது புதல்வன்முன் வாராமற்
துய்யாம றைந்திருந்த சோதனை தானேதறியேன்
வையாபு ரிக்கிரியாய்! வருவாய் இதுசமயம். 33

கள்ளமிலா நின்னடியைக் கனவில்மற வாமல்நிதம்
உள்ளமதி லேதுதித்த உண்மையடி யேனலயோ!
தெள்ளமுதே! கற்கண்டே! சீனியே செந்தேனே!
வள்ளலே! என்நேரில் வருவாய் இதுசமயம். 34

சித்தாந்த வித்தாரா! தேவர் சேனாபதியே!
முத்தாந்த நீறணிந்த முகவதனக் கெம்பீரா!
கர்த்தாவே! இக்கலியிற் கடவுளே! மெய்ஞ்ஞானம்
வத்தாச் சமுத்திரமே! வருவாய் இதுசமயம். 35

உன்னையன்றி வேறுதெய்வம் உலகமிசை ஏதறியேன்!
அன்னைபிதா வுங்குருவு மாதரனைக் கர்த்தனும் நீ!
என்னையுந்தன் ஆளாக்கி ஈடேற்ற வேணுமையா!
வண்ணமயில் மீதேறி வருவாய் இதுசமயம். 36

சத்துருசங் காரவைவேற் சண்முகனே! நின்னருளின்
உத்திரவு தந்தாள உன்னாணை யேவருவாய்!
சித்தர்பர வும்பழநிச் செவ்வேளே! யென்னிதய
வருத்தமதை நீக்கஇனி வருவாய் இதுசமயம். 37

முருகா எனத்துதிக்கின் மூதறிவுமே அருளித்
திருகா வரமளிக்குந் திவ்வியதே சோன்மயமே
மருகார் கடம்பணிந்த மார்பழகனே! தருணம்
வருகா! துறல்சரியே! வருவாய் இதுசமயம். 38

பரமகுரு சுப்பையா! பழனிமலை மீதுறை வோய்
திருமதுரைச் சொக்கேசா! சேயனென வந்தவனே
அரியமறை மெய்ப்பொருளே அடியனென் மீதினில்நீ
வருமம் நினையாதே ? வருவாய் இதுசமயம். 39

பண்ணிறைந்த பாடல்புகழ் படிமேல் புலவருக்கு
எண்ணிறைந்த நற்சுகமே வீய்ந்தருளும் மெய்க்கடவுள்
திண்ணிறைந்த வீரமிகுஞ்ச சேவற்ப தாகையுடன்
வண்ணிறைந்த பொற்பாதா! வருவாய் இதுசமயம். 40

சிருட்டிமுதல் முத்தொழிலுஞ் செய்தளிக்குஞ் சிற்பரனே
திருட்டி பன்னிரெண்டமைந்த தெய்வமுனையே சமமும்
அருட்டியடி யேனெனக்கு மாதரவு மேயருளும்
மிரட்டிவிட நியாயமல்ல! வருவாய் இதுசமயம். 41

தண்டுமொரு கையூன்றித் தண்கோ ளப்பார்வை
கொண்டுநிற்கும் என்கோவே! குகனே சரவணனே!
தொண்டர்கு ழாந்துதிக்கத் துய்ய அருளேகொடுப்ப
வண்டுமுரல் தார்கடம்பா! வருவாய் இதுசமயம். 42

எத்தனை குற்றம்பிழை களையேயான் செய்திடினும்
அத்தனையும் நீபொறுத்த அடியேனை ஆதரிப்பாய்
வித்தகனோ் மாமயிலில் வேண்டியிந்த வேளைதனில்
வித்துவித மெய்ப்பொருளே! வருவாய் இதுசமயம். 43

கலியின் நாலாயிரமும் கடந்தபின்ன ரெண்ணூறுபோய்
மலிநந் தனல் வருடம் மங்களநேர் தைப்பூசஞ்
சிலைதிருந்தி நாற்பதுநாள் திருப்பணி பிரதிட்டை செய்து
மலியவுனைத் தோத்தரித்தேன்! வருவாய் இதுசமயம். 44

காப்புடனே நாற்பத்துநால் கண்நிறையப் பாடல்களும்
ஏற்படுத்தி நின்றாளி லிச்சமய மாலைதமிழ்
நேர்புனைந்தே னென்பிழையை நீபொறுத்து மிப்போது
மாப்புச் செய்ய வேணுமினி வருவாய் இதுசமயம். 45

*பழனி ஜமீன்தார் விஜயகிரிதுரை*

## ஸ்ரீ நடராஜர் பதிகம்

"ஓம்நமச்சிவாய ஓம் ஓம்நமச்சிவாய
ஓம்நமச்சிவாய ஓம் ஓம்நமச்சிவாய"

*பதிகம்*

அங்கும்இங்கும் எங்குமாய்
அமைந்த தேவதேவனே!
ஆதியாய் அநாதியாய்ச்
சமைந்த ஜோதிரூபனே!
மங்கலங்கள் யாவும்நல்கும்
அம்பிகை மணாளனே
மைந்தன்செய்யும் பூஜையில்
மகிழ்ந்தருள் நடேசனே! 1

எந்தஇல்லம் ஆயினும்
இருந்தஇல் சிதம்பரம்
எடுத்தபீடம் ஆலயம்: தொ
டுத்தகூரை கோபுரம்:
செந்தமிழ்ச்சொல் மந்திரம்:
திருந்தும்அன்பே ஆகமம்:
சிவந்தபாத பங்கயம்
உவந்தருள் நடேசனே! 2

மன்றிலே எடுத்தகால்என்
மனையிலும் எடுத்துவை;
மனதிலே நினைத்தநன்மை
விரைவிலே முடித்துவை;
என்றும்தீமை அணுகிடாமல்
ஈசனே தடுத்துவை;
ஏத்தும்அன்பர் குழுவில்என்னைச்
சேர்த்துவை நடேசனே! 3

ஆ–பயந்த ஐந்தினோடு
பால்,பழம், பஞ்சாமிர்தம்
ஆலைவாய்க் கரும்பு,தெங்கு
தேன்,சுகந்த சந்தனம்

நீ–பயந்த யாவையும்
நினக்களித்தேன் ஈசனே!
நேர்த்தியாய் அனைத்தும்ஆடி
வாழ்த்துவாய் நடேசனே! 4

அட்டநாக பூஷணம்
அளிக்கவல்லன் அல்லனே!
ஆனை,மான், சிறுத்தைவேட்டை
ஆடவல்லன் அல்லனே!
இட்டமாலை ஆடையோடு
தொட்டுவைத்த சந்தனம்
என்றும்நல்க வல்லன்வல்லன்
கொண்டருள் நடேசனே! 5

வில்லினால் அடிக்கவோ?
வீசுகல் பொறுக்கவோ?
மிதித்தபோது கை,பிரம்பை
மேலும்நான் எடுக்கவோ?
நல்லபிள்ளை என்னைஆளும்
நாதனும்நீ அல்லவோ?
நாளும்நான் படைத்தசொல்லும்
பூவும்கொள் நடேசனே! 6

ஆட, நீ எடுத்ததாய்
அறிந்தவர் இயம்புவார்
அல்லஅல்ல என்தலைமேல்
சூடஎன்று சொல்கிறேன்!
ஈடில்லாத தெய்வம்நீ
இடப்புறம் எடுத்தகால்
எந்தநோக்கில் என்றுசொல்ல
வந்தருள் நடேசனே! 7

மழுவெடுத்(து) எதைவிளக்க
மன்றுதோறும் ஓடினாய்?
மதியெடுத்த சிரம்இருக்க
மத்தனாய்ஏன் ஆடினாய்?

கழுவெடுத்து நடனம்ஆடும்
காட்டில்என்ன தேடினாய்?
கையில்நான் எடுத்ததூபம்
கொள்ளுவாய் நடேசனே! 8

எடுத்ததூபம் ஆதியாவும்
ஏற்றருள் மகேசனே!
இன்றுநான் படைத்தயாவும்
உண்ணுவாய் சபேசனே!
தடுத்தபண்டை வினையகற்றி
தாங்குவாய் சர்வேசனே!
சரணம்உன்னை அன்றிஏது?
தாங்குவாய் நடேசனே! 9

வாழிநீபடைக்கும் தெய்வம்
மலர்அணை அமர்ந்ததாம்!
வகுத்தளிக்கும் தெய்வம்கூட
அரவணை கிடந்ததாம்!
ஊழிதோறும் ஐந்தொழில்
உவந்துசெய்யும் ஈசனே!
ஓய்ந்துசற்றென் நெஞ்சணைக்கண்
சாய்ந்துகொள் நடேசனே! 10

ஓம்நமச்சி வாயஓம்
சிவாயநம: ரூபனே!
ஓதும்ஐந்து சபையில்ஆடும்
பதனே! சங்கீதனே!
வாமியாய்த் தழைத்தசிவ
காமிகாதல் நேசனே!
மாறிலாத கருணைநீ
வழங்குவாய் நடேசனே! 11

*- அருட்கவி கு.செ. இராமசாமி*

# கந்தர் சஷ்டி கவசம்

தேவராய சுவாமிகள் அருளிச்செய்த கந்தர் சஷ்டி கவசத்தினை நாள்தோறும் காலையும் மாலையும் அகமும் புறமும் தூய்மையுடனும் உண்மையான பக்தி உள்ளத்துடன் ஒன்றுபட்ட மனத்துடன் வேறு பல நினைவுகள் இல்லாமல் அருள்மிகு முருகப்பெருமானை நினைத்து நாள் ஒன்றுக்கு முப்பத்தாறு முறை ஓதி, திருநீறு அணிந்து கொண்டால் எட்டுத்திசையில் உள்ளோரும் இனிய நண்பராவார். அரசாங்கமும் அதிகாரிகளும் அன்பு காட்டித் துணை புரிவர். பகைவர்களும் பணிந்து வணங்குவர். நவக்கிரகங்கள் மகிழ்ந்து நன்மையளித்திடும். உடல் நலமும் அழகு பெறும். எந்நாளும் கவலையின்றி வாழ்வர். நவீன மருந்துகளால் தீராத நோய்கள் திருமுருகன் அருள்மருந்தால் தீர்த்து உடல் நலம் பெறும். ஏவல் பில்லி சூனியங்கள் தள்ளி ஓடிப்போகும். உடலின் உறுப்புகள் அனைத்துக்கும் கவசம் போட்டு காத்திருப்பது போன்ற பாதுகாப்பு ஏற்படுத்தி தீர்க்காயுளும், நோயற்ற பெருவாழ்வும் கிட்டும் என்பது திண்ணம்.

**காப்பு**

நேரிசை வெண்பா

துதிப்போர்க்கு வல்வினைபோம் துன்பம்போம்—நெஞ்சிற்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்—கதித்தோங்கும்
நிஷ்டையுங் கைகூடும், நிமலரருள் கந்தர்
சஷ்டி கவசந் தனை.

**குறள் வெண்பா**

அமரரிடர் தீர அமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

நூல்

நிலைமண்டில ஆசிரியப்பா

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பண்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட
மையல் நடனஞ்செயும் மயில்வா கனனார்

கையில்வே லால்எனைக் காக்கவென் றுவந்து
வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக
இந்திரன் முதலா எண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக

வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த அய்யா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக

சரவண பவனார் சடுதியில் வருக
ரவண பவச ரரரர ரரர
ரிவண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரவண வீரா நமோநம
நிபவ சரவண நிறநிற நிறென

வசர வணபவ வருக வருக
அசுரர்குடி கெடுத்த அய்யா வருக
என்னை ஆளும் இளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசாங் குசமும்
பரந்த விழிகள் பன்னிரண் டிலங்க

விரைந்தெனைக் காக்க வேலோன் வருக
அய்யும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையுங் கிலியும்
கிலியுஞ் சௌவும் கிளரொளி யையும்
நிலைபெற் றென்முன் நித்தமும் ஒளிரும்

சண்முகன் றீயும் தனியொழி யொவ்வும்
குண்டலி யாம்சிவ குகன்தினம் வருக
ஆறுமுகமும் அணி முடி ஆறும்
நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச் செவ்வாயும்

நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகுகுண்ட லமும்
ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்
பல்பூ ஷனமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்

முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயி றுந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராகவும்
இருதொடை அழகும் இணைமுழந் தாளும்

திருவடி யதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகெணெ
மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண

ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து

முந்து முந்து முருகவேள் முந்து
என்றனை யாளும் ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந் துதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோ தனென்று

உன்திரு வடியை உறுதியென் றெண்ணும்
என்தலை வைத்துன் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க
அடியேன் வதனம் அழகுவேல் காக்க

பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க
கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க
விழிசெவி இரண்டும் வேலவர் காக்க
நாசிக ளிரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க

முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்ன மிரண்டும் கதிர்வேல் காக்க
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க
மார்பை இரத்ன வடிவேல் காக்க

சேரிள முலைமார் திருவேல் காக்க
வடிவே லிருதோள் வளம்பெறக் காக்க
பிடரிக ளிரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க

வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாணாங் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்குறி இரண்டும் அயில்வேல் காக்க
பிட்ட மிரண்டும் பெருவேல் காக்க

வட்டக் குதத்தை வல்வேல் காக்க
பணைத்தொடை யிரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
அய்விரல் அடியிணை அருள்வேல் காக்க
கைக ளிரண்டும் கருணைவேல் காக்க

முன்கை யிரண்டும் முரண்வேல் காக்க
பின்கை யிரண்டும் பின்னவள் இருக்க
நாவில் சரஸ்வதி நற்றுணை யாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க
முப்பால் நாடியை முனைவேல் காக்க

எப்பொழு தும்எனை எதிர்வேல் காக்க
அடியேன் வதனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரையிருள் தன்னில் அணையவேல் காக்க

ஏமத்தில் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க
தாக்க தாக்க தடையறத் தாக்க

பார்க்கப் பார்க்கப் பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம் வலாஷ்டிகப் பேய்கள்
அல்லல் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும்

கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரம ராட்சதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசி காட்டேரி இத்துன்ப சேனையும்
எல்லினும் இருட்டிலும் எதிர்ப்படும் அண்ணரும்

கனபூசை கொள்ளும் காளியோ(டு) அனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டாளர் களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந்(து) ஓடிட
ஆனை அடியினில் அரும்பா வைகளும்

பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்
நகமும் மயிரும் நீள்முடி மண்டையும்
பாவைக ளுடனே பலகல சத்துடன்
மனையில் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டிய செருக்கும் ஒட்டிய பாவையும்

காகம் பணமும் காவுடன் சோறும்
ஓதும் அஞ்சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றார் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாள்எனைக் கண்டால் கலங்கிட

அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட்டு அலறி மதிகெட்டு ஓடப்
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுடன் அங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கால்கை முறிய

கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதில் செதிலாக
சொக்கு சொக்கு சூர்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்

பற்று பற்று பகலவன் தணல்எரி
தணல்எரி தணல்எரி தணல் அதுஆக
விடுவிடு வேலை வெருண்டது ஓட
புலியும் நரியும் புன்நரி நாயும்
எலியும் கரடியும் இனித்தொடர்ந்து ஓடத்

தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்துயிர் அங்கம்
ஏறிய விஷங்கள் எளிதுடன் இறங்க
ஒளிப்பும் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்

சூலைசயம் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல் விப்புரிதி
பக்கப்பிளவை படர் தொடைவாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத்து அரணை பருவரை யாப்பும்

எல்லாப் பிணியும் எந்தனைக் கண்டால்
நில்லா தோட நீஎனக்கு அருள்வாய்
ஈரேழ் உலகமும் எனக்கு உறவாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்காய்
மண்ணாள் அரசரும் மகிழ்ந்து றவாகவும்

உன்னைத் துதிக்க உன் திருநாமம்
சரவண பவனே! சைலொளி பவனே!
திரிபுர பவனே! திகழொளி பவனே!
பரிபுர பவனே! பவமொளி பவனே!
அரிதிரு மருகா! அமரா பதியைக்

காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா குகனே கதிர்வே லவனே
கார்த்திகை மைந்தா கடம்பா கடம்பனை
இடும்பனை அளித்த இனியவேல் முருகா
தணிகா சலனே சங்கரன் புதல்வா

கதிர்கா மத்துறை கதிர்வேல் முருகா!
பழநிப் பதிவாழ் பால குமாரா!
ஆவினன் குடிவாழ் அழகிய வேலா!
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா!
சமரா புரிவாழ் சண்முகத் தரசே!

காரார் குழலாள் கலைமகள் நன்றாய்!
என்நா இருக்க யான் உனைப்பாட
எனைத் தொடர்ந்து இருக்கும்எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவசம் ஆக
ஆடினேன் நாடினேன் ஆவினன் பூதியை
நேசமுடன் யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி
உன்பதம் பெறவே உன்அருள் ஆக
அன்புடன் இரட்சி அன்னமும் சொன்னமும்
மெத்தமெத் தாக வேலா யுதனார்
சித்திபெற்று அடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க! வாழ்க! மயிலோன் வாழ்க
வாழ்க! வாழ்க! வடிவேல் வாழ்க
வாழ்க! வாழ்க! மலைக்குரு வாழ்க
வாழ்க! வாழ்க! மலைக்குற மகளுடன்
வாழ்க! வாழ்க! வாரணத் துவசம்
வாழ்க! வாழ்க! என்வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை அடியேன் எத்தனை செய்யினும்
பெற்றவன் நீகுரு பொறுப்ப துஉன்கடன்
பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே
பிள்ளையென்று அன்பாய்ப் பிரியம் அளித்து
மைந்தன்என் மீதுஉன் மனம்மகிழ்ந்து அருளித்
தஞ்சம்என்ற அடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துடன் நாளும்
ஆசாரத் துடன் அங்கம் துலக்கி
நேசமுடன் ஒரு நினைவது ஆகிக்
கந்தர் சஷ்டி கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத்து ஆறுஉருக் கொண்டு

ஓதியே செபித்து உகந்துநீறு அணிய
அஷ்டத்திக்கு உள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர் செயலது அருளுவர்
மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்
நவமதன் எனவும் நல்எழில் பெறுவர்
எந்த நாளும்ஈ ரெட்டாய் வாழ்வர்
கந்தர்கை வேலாம் கவசத் தடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியால் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிப்பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்காரத்து அடி
அறிந்துஎனது உள்ளம் அஷ்ட லட்சுமிகளில்
வீர லட்சுமிக்கு விருந்து உணவுஆகச்
சூர பத்மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க்கு உவந்துஅமுது அளித்த
குருபரன் பழநிக் குன்றினில் இருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி
எனைத் தடுத்துஆட் கொள்ள எந்தனதுள்ளம்
மேவிய வடிவுறும் வேலவா போற்றி
தேவர்கள் சேனா பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி
திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேளே போற்றி
உயர்கிரி கனக சபைக்கு ஓர்அரசே
மயில்நட மிடுவோய் மலரடி சரணம்
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்!

## நவபாஷாணம்

பழனி முருகன் சிலையை நவபாஷாண்த்தால் போக முனிவர் அமைத்தார். நவபாஷாணம் என்பது :

1. திருமுகப் பாஷாணம்,
2. கார்முகில் பாஷாணம்,
3. இந்திரகோப பாஷாணம்,
4. குங்கும பாஷாணம்,
5. கில்வன பாஷாணம்,
6. பவளப்புற்று பாஷாணம்,
7. கவுரி பாஷாணம்,
8. ரக்த பாஷாணம்,
9. அஞ்சன பாஷாணம்.

## பழனியில் கார்த்திகை

பழனி தண்டாயுதபாணி முருகன் கோவிலில் உள்ள மலையில் பல்வேறு விழாக்கள் கொண்டாடப்படுகின்றன. ஆனால், எந்த விழாவிலும் மலையில் உள்ள கோவிலில் கொடி ஏற்றும் வழக்கம் இல்லை. கார்த்திகை திருவிழா சஷ்டி திருவிழாவின் போது மலையில் காப்பு மட்டும் கட்டப்படும்.

தைப்பூசம், வைகாசி விசாகம் விழாக்களில் பழனி அடிவாரத்தில் உள்ள பெரிய நாயகி அம்மன் கோவிலில் கொடி ஏற்றப்படும். பங்குனி, உத்திர திருவிழாவின்போது திருஆவினன்குடி கோவிலில் கொடி ஏற்றப்படும்.

## ஆறுமுக அர்ச்சனை!

திருச்செந்தூரில் உள்ள ஆறுமுகப் பெருமானின் ஆறுமுகங்களுக்கும் ஆறுமுக அர்ச்சனை நடைபெறும். ஆறு வாத்தியார்கள் முருகனின் 6 முகத்தின் முன் நின்று திருநாமங்களைப் பாட, சிவாச்சாரியார்கள் 6 பேர் அமர்ந்து, மலர் தூவி அர்ச்சனை செய்வது தான் ஆறுமுக அர்ச்சனை என்று பெயர்.

அப்போது 6 திருமுகங்களுக்கும், ஆறுவகையான உணவு படைக்கப்படும். 6 கற்பூரத் தட்டுகளில் கற்பூரம் ஏற்றி தீபாராதனை காட்டப்படும்.

முருகனின் ஆறுமுகங்களும் 6 விதமான செயல்களை செய்வதாக ஐதீகம். உலகிற்கு ஒளி தருவது ஒரு முகம், வேள்விகளை காப்பது ஒரு முகம், அடியார் குறை தீர்ப்பது ஒரு முகம், வேத ஆகமப் பொருளை விளக்குவது ஒரு முகம், பகைவனையும், தீயோனையும் அழிப்பது ஒரு முகம், தேவியருக்கு மகிழ்ச்சி தருவது ஒரு முகம்.

## நாரதர் வீதி உலா வரும் முகருகன் கோவில்!

கோவில்களில் உற்சவர்கள் வீதி உலா வருவது உண்டு. நாரதர் வீதி உலா வரும் ஒரே கோவில் விராலிமலை முருகன் கோவிலில் மட்டுமே. முருகன் உலா வரும் போது இவரும் தனி உற்சவ விக்கிரமாக வருகிறார். இது கார்த்திகை தைப்பூசம் பங்குனி உத்திரம் விழாவில் மட்டுமே.

## சண்டிகேஸ்வரர்

சிவன் கோவில்களுக்குச் செல்லும்போது, அங்கு யாரை வணங்கினாலும், வணங்காவிட்டாலும், யோக நிலையிலிருக்கும் சண்டிகேஸ்வரரை நிச்சயமாக வணங்கிவர வேண்டும். சிவன் கோயில்களில் வடக்கு பிரகாரத்தில் இவருக்கு தனிச்சன்னதி இருக்கும். சண்டிகேஸ்வரர் என்றால் கணக்காளப் பணி செய்பவரைக் குறிக்கும். இறைவனிடம் நாம் வேண்டிக் கொள்ளும் செயல்கள் நிறைவேற இவர் பரிந்துரை செய்வதாக ஐதீகம். சிவாலயங்களில் சண்டிகேஸ்வரரை தரிசிக்காமல் திரும்பினால் கோயிலுக்குச் சென்றதிலேயே பயனில்லை, ஏனெனில், நாம் கோவிலுக்கு வந்த கணக்கை அவர் எழுத மாட்டார் என்பர்.



## காசிக்கயிறு தத்துவம்

காசிக்கு போயும் பாவம் தீரவில்லையே எனச் சிலர் சொல்வர். இதற்கு காரணம் தெரியுமா ? காசியில் பைரவர் இருக்கிறார். இவரை வணங்கிய பின் கையில் காசிக்கயிறு என்ற கருப்பு நிறக்கயிறை கட்ட வேண்டும். இதில் ஐந்து முடிச்சுகளும் இருக்கும். இதன் தாத்பர்யம் என்ன தெரியுமா ? காசிக்குப் போவதே பாவங்களைத் தொலைக்கத்தான். அங்கு போய் வந்தபிறகும், ஆசைகளில் சிக்கி நாம் பாவங்களையே செய்கின்றோம். அந்த பாவங்களை கரிய இருளுக்கு ஒப்பிட்டு, வலது கையில் கருப்புகயிறு கட்டப்படுகிறது. அதைப் பார்க்கும் நேரமெல்லாம் மீண்டும் இந்த இருளில் சிக்கக்கூடாது, அதாவது பாவம் செய்யக் கூடாது என்ற நினைப்பு வரவேண்டும். ஆணவம், பொறாமை, ஆசை, காமம், மாயை (உடல் நிலையானது என்ற எண்ணம்) ஆகியவற்றை அந்த முடிச்சுக்கள் குறிக்கின்றன. இந்த முடிச்சுகளில் மீண்டும் சிக்கிக் கொள்ளக் கூடாது என்ற நினைப்பு கயிற்றைப் பார்த்தால் வரவேண்டும். இதை மீறுபவர்களுக்கு பைரவர் மீண்டும் பிறவித் துன்பத்தைத் தருவார் என்கின்றனர் ஆன்றோர்.

---

## கோபுரங்களின் உயரம்

| | | |
|---|---|---|
| ஸ்ரீரங்கம் ரங்கநாதர் | – | 236 அடி |
| திருவண்ணாமலை அண்ணாமலையார் | – | 217 அடி |
| தஞ்சாவூர் பிரகதீஸ்வரர் (விமானம்) | – | 216 அடி |
| கங்கை கொண்ட சோழபுரம் பிரகதீஸ்வரர் (விமானம்) | – | 174 அடி |
| மதுரை மீனாட்சி (தெற்கு கோபுரம்) | – | 170.8 அடி |
| ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆண்டாள் | – | 164 அடி |
| மன்னார்குடி ராஜகோபாலசுவாமி | – | 154 அடி |
| கும்பகோணம் சாரங்கபாணி | – | 147 அடி |
| சிதம்பரம் (வடக்கு கோபுரம்) | – | 140 அடி |
| திருவானைக்காவல் ஜலகண்டேஸ்வரர் (கிழக்குகோபுரம்) | – | 135 அடி |
| சுசீந்திரம் தாணுமாலயன் | – | 134 அடி |
| கும்பகோணம் கும்பேஸ்வரர் | – | 128 அடி |
| திருச்செந்தூர் முருகன் | – | 127 அடி |
| ராமேஸ்வரம் ராமநாதர் (கிழக்கு கோபுரம்) | – | 126 அடி |
| திருவாரூர் கீழக்கோபுரம் | – | 118 அடி |

## உத்திராட்சமும், அதன் பெருமையும்!

புராதன காலத்தில் அதர்மம் செய்வதையே குறிக்கோளாகக் கொண்ட தாரகாட்சன், வித்யுன்மாகலி, கமகலாட்சன் என்ற மூன்று அசுரர்கள் மிகக் கடுமையாக தவம் செய்து, பிரம்மதேவரிடமிருந்து பல வரங்களைக் கேட்டுப்பெற்றனர். அதனால் அளவற்ற பலசாலிகளாக விளங்கிய இம்மூன்று அசுரர்களும் பறக்கும் சக்தி வாய்ந்த மூன்றுகோட்டைகளை நிர்மாணம் செய்து கொண்டனர். அவற்றின் மூலம் ஆகாயத்தில் பறந்து சென்று தேவர்களை யுத்தத்தில் தோல்வியுறச்செய்து, இந்திரனுடைய உலகையும் கைப்பற்றினர்.

அவர்கள் புரிந்த அக்கிரமங்கள் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே வந்தன. அவர்களை அழித்தே ஆகவேண்டும் என்ற சூழ்நிலை ஏற்பட்டது. அத்தருணத்தில் சிவபெருமான் ஆயிரம் தேவ வருஷங்கள் மிகக் கடுமையான தியானத்தில் ஆழ்ந்தார். ஆயிரம் தேவ வருஷங்களும் தனது கண்களை மூடாமல் மிகவும் உக்கிரமான தியானத்தில் ஆழ்ந்திருந்த சிவபெருமானின் திவ்ய நேத்ரங்களிலிருந்து (கண்கள்) மூன்று கண்ணீர் துளிகள் பூமியில் விழுந்தன.

அம்மூன்று கண்ணீர் துளிகளும் உத்திராட்ச மரங்களாகவும், அம்மரங்களில் உத்திராட்ச மணிகளாகவும் சிவபெருமானின் அம்சமாகத் தோன்றின. பலவித முகங்களைக் கொண்டும், பலவித நிறங்களிலும் விளங்கிய இந்த உத்திராட்ச மணிகள் சிவஸ்ரூபமானவை ஆகும். ஆதலால், மிகவும் சக்தி வாய்ந்தவையாகவும், பூஜைக்கு உரியனவாகவும் காலம் காலமாக உத்திராட்சமணிகள் பூஜிக்கப்பட்டு வருகின்றன.

### உத்திராட்சங்களின் சக்தி!

எந்தக் கிரகத்தில் (வீடு) பக்தியுடன் தினமும் உத்திராட்சம் வில்வத்தினால் பூஜிக்கப்படுகிறதோ, அந்த வீட்டினை பில்லி, சூன்யம், செய்வினைதோஷங்கள் அணுகமுடியாது எனப் புராதன நூல்கள் கூறுகின்றன. உத்திராட்ச மரங்கள் விளையும் பூமி திருக்கயிலைக்குச் சமமாகும். இமயமலைச் சாரலிலுள்ள

ருத்ரப்பிரயாகை, திருக்கேதாரம், கங்கோத்ரி, யமுனோத்ரி ஆகிய பிரதேசங்களில் உத்திராட்ச மரங்கள் இருப்பதால் அவ்விடங்களை தேவபூமி என 'கங்கா மகாத்மியம்' என்ற நூல் கூறுகிறது.

## உத்திராட்ச வகைகள்!

உத்திராட்ச மணிகளில், நிறம், முகம் ஆகியவற்றின் அடிப்படையில் சுமார் 41 வகைகள் உள்ளன. இவற்றில் ஏகமுக உத்திராட்சம் (ஒரு முகம் கொண்டது) சிவபெருமானின் நேர் சொரூபமாகும். இது கிடைப்பது மிகவும் அரிது. முற்பிறவிகளில் மகத்தான புண்ணியங்களைச் செய்திருந்தால் மட்டுமே கிடைக்கக்கூடியவை. இவ்வகை உத்திராட்சத்தைப் பூஜிப்பதால் பிரம்மஹத்தி தோஷமும் நீங்கும். தற்கொலை எண்ணங்கள் விலகும். சிவபெருமானின் திருவடிகளை எளிதில் பெற்றுத் தருபவை இவை.

இரண்டு முகம் கொண்ட "த்வி முக உத்ராட்சம்" (இருமுகம் கொண்டவை) ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரர் எனப் பூஜிக்கப்படும் உத்திராட்சமாகும். ஒருமுகம் கொண்ட உத்திராட்சத்தைப் போலவே இருமுக உத்திராட்சங்கள் கிடைப்பதற்கு அரியவையாகும்.

சிவபெருமானின் முக்கண் சொரூபத்தைக் கொண்டவை. "த்ரிமுக உத்திராட்சம்" (மூன்று முகம்) இவ்வகை உத்திராட்சத்தை அணிவதால் மனம் தூய்மையாகும். சிந்தனை சிவபெருமானிடத்தில் லயிக்கும்.

இதுபோன்றே சப்த முகம் (ஏழு முகங்கள்) கொண்ட உத்திராட்சம், அஷ்ட முகம் (எட்டு முகங்கள்) உத்திராட்சம், ஏகதச முக உத்திராட்சம் (பதினொரு முகங்கள்) ஆகியவை கிடைப்பதற்கு அரியவையாகும். இவ்வகை உத்திராட்ச மணிகளை அணிந்து கொண்டால் மிகக் கொடிய பாவங்களும் விலகும்.

## உத்திராட்ச மரத்தின் தெய்வீகப் பெருமை!

உத்திராட்ச மரங்களின் தெய்வீகப் பெருமையும் சக்தியும் அளவற்றவையகும். உத்திராட்ச மரத்தின் அடிப்பகுதியில் பிரம்மாவும், நடுப்பகுதியில் மகாவிஷ்ணுவும், இலை, பூ, காய், கனி,

மணிகள் ஆகியவற்றில் சிவபெருமானும் நித்யவாசம் செய்வதாகப் புராதன நூல்கள் விளக்கியுள்ளன. சில வினாடிகள் உத்திராட்ச மரத்தின் நிழலில் நின்றால் கூட, நாம் செய்துள்ள மிகக் கொடிய பாவங்களும் தீயில் பட்ட தூசாகி விலகி விடும்.

தினமும் பூஜையின் போது உத்திராட்ச மணிகள் கொண்ட மாலையணிந்து, சிவபூஜை செய்தாலும், பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபித்தாலும் ஆயிரமாயிரம் பிறவிகளில் செய்யும் புண்ணிய பலன்கள் எளிதில் நமக்குக் கிட்டுமென ஜாபாலி மகரிஷி அருளியிருக்கிறார்.

எத்தகைய வியாதியானாலும் ஸ்ரீ ஆதிசங்கரரின் ஸ்ரீ பஞ்சாட்சர மந்திரஸ்லோகத்தை ஜெபித்து, உத்திராட்ச மணியை வைத்து பூஜித்தால், நோயிலிருந்து பூரணமாக விடுபட முடியும் எனவும், காலக் கிரமத்தில் சிவலோக சான்னித்யம் கிட்டும் எனவும் மகரிஷிகள் அருளியிருக்கின்றனர்.

உத்திராட்சத்தைப் பூஜிப்பதால் கிடைக்கும் சுப பலன்களை முழுமையாக விளக்குவது கடினம். சிவபெருமானின் கருணையைச் சுலபமாகப் பெறுவதற்கு உத்திராட்ச பூஜை மிக, மிக எளிதானதாகும்.

---

## பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழ்க

மணமக்களை வாழ்த்தும் போது பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழ்க என்று வாழ்த்துவது மரபு. இந்த 16 செல்வங்கள்.

1. கல்வி, 2. தீர்க்காயுள், 3. நல்ல நண்பர்கள், 4. வற்றாத செல்வம், 5. என்றும் மாறா இளமை, 6. நோயற்ற வாழ்வு, 7. சலியாத மனம், 8. மாறாத அன்பு, 9. நல்ல குழந்தைகள், 10. வற்றாத புகழ், 11. மாறாத வார்த்தை, 12. தர்மம் செய்யும் பண்பு, 13. வீரம், 14. நடுநிலை தவறாமை, 15. இன்பமான வாழ்வு, 16. இறைபக்தி.

## விநாயகப் பெருமானின் கரங்களில்

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டி | – | லிங்கம் |
| திருப்பரங்குன்றம் | – | கரும்பு வில் |
| உடையார் பாளையம் | – | வில் |
| தேனி பெத்தாட்சி விநாயகர் | – | அமிர்த கலசம். |
| சென்னை, திருவல்லிக்கேனி பார்த்தசாரதி கோவில் | – | வெண்ணெய் |
| மாங்காடு (சென்னை) வெற்றி விநாயகர் கோவில் | – | மாம்பழம் |
| பவானி (திரு நணா) | | வீணை |
| கும்பகோணம் நாகேசுவரம் கோவில் | – | ருத்திராட்சமாலை |
| ஸ்ரீசைலம் (திருப்பருப்பதம்) | – | குழல் |

## கையொடிந்த விநாயகர்

சிதம்பரத்தில் செங்கழுநீர் பிள்ளையார் கோவில் இருக்கிறது. இந்தப் பிள்ளையாருக்கு ஒரு கை உடைந்திருக்கிறது. ஒரு முறை இந்த சிலையை அகற்றிப் புதிய சிலை வைக்க முயற்சி செய்தனர் பக்தர்கள். அப்போது ஒரு இரவு திருப்பணி குழுவின் தலைவரின் கனவில் பிள்ளையார் தேன்றி, ‘உன் பிள்ளையின் ஒரு கை ஒடிந்தால் வீட்டைவிட்டு விரட்டி விடுவாயா?’ என்று கேட்டார். இதைத் தொடர்ந்து புதிய சிலை வைக்கும் முயற்சி கை விடப்பட்டது.



## ஆன்மீகத்தில் - அறிவியல்

## பாட்டு – Music Therapy

தாலாட்டின் ராகம் நீலாம்பரி. அந்த ராகத்தைக் கேட்டால் மனது அமைதியாகி தூக்கம் வருகிறது. ராகம் என்பது ஒலிகளின் தொகுப்பு. நீலாம்பரி ராகத்தின் ஒலி தொகுப்புகளுக்கு மனத்தை அமைதியாக்கும் சக்தி இருப்பதால்தான் தூக்கம் வருகிறது.

அமிர்தவர்ஷிணி என்ற ராகத்தை பாடினால் மழை வரும். இதை சங்கீத மேதைகள் முத்துசாமி தீக்ஷிதர், செம்மங்குடி, பாலமுரளிக்கிருஷ்ணா, குன்னக்குடி வைத்யநாதன் எனப் பலர் நிரூபித்தனர். அமிர்தவர்ஷிணி ராகத்தின் ஒலி தொகுப்புகள் வான்வெளியில் ஈரப்பதத்தைக் குவித்து மேகங்களைத் திரட்டி குளிரவைத்து மழையைப் பொழிய வைக்கும் வலிமை கொண்டது. அதனால் தான் மழை பெய்கிறது.

வருணஜபம் செய்தாலும் மழை வரும். வருணஜப மந்திரத்தின் ஒலித் தொகுப்புகள் அமிர்தவர்ஷிணி ராகத்தின் ஒலித்தொகுப்புகளைப் போலவே இருக்கின்றன. இரண்டு ஒலித் தொகுப்புகளின் மொத்த சக்தி சரிசமமாக இருப்பதாக ஜெர்மனியில் இருக்கும் 'இன்டலாஜி' ஆய்வுமையம் நிரூபித்துள்ளது.

அக்பர் சபையில் தான்சேன் தீபக் ராகம் பாடி திரி, எண்ணெய் இல்லாமல் விளக்கை எரியச் செய்தார். மேகராகம் பாடி கல்லை கரைய வைத்தார் ஒரு வித்வான்.

ஹாலாந்தில் மாட்டுப் பண்ணையில் பாட்டு கேட்ட பசுக்கள் அதிகம் பால் கொடுத்ததாம்.

சில மிருகங்கள் கூட சில ராக (இசை) அதிர்வுகளுக்கு மயங்குகின்றன. பாம்பு கூட செவிபுலன் இல்லாத போதும் மகுடி வாசிக்கும் போது அதன் ஒலி அதிர்வுகள் பாம்பின் உடலில் உரசுவதால் பாம்பிற்கு ஒரு இன்ப அதிர்வு உண்டாகிறது. அந்த மகிழ்ச்சியினால் அது படமெடுத்து ஆடுகிறது. இதிலிருந்து படைத்தல், காத்தல், அழித்தல் சக்தியெல்லாம் ஓசைக்கு உண்டு என்பது தெரிகிறது.

ஒன்றுமில்லாத ஆகாயத்தில் எலக்ட்ரிசிட்டியால் எவ்வளவோ வேலைகள் செய்யப்படுகின்றன. அதுபோல குணம், குறி ஒன்றுமில்லாத பிரம்மமான அறிவுப் பொருளிடமிருந்து உண்டாகும். பிரளய காலத்தில் அந்த அறிவு தூங்கும். அதாவது செயலற்று இருக்கும். ஒரு குத்துச்சண்டை வீரன் தூங்கும் பொழுது அவனது சக்தி ஒன்றும் தெரிவதில்லை. குஸ்தி முதலிய போட்டிகளின் போது அவனது சக்தி தெரிகிறது. அதுபோல படைத்தல் காலத்தில் அறிவுமயமான சக்தி பல வேலைகளைச் செய்கிறது.

தெய்வீக பாடல்கள் அதாவது வேத கீதங்கள் ஸௌந்தர்யலஹரி, தேவாரம், திருவாசகம், ப்ரபந்தம் முதலானவற்றிற்கு மனத்தை உருக்கி ஆண்டவனிடம் மனத்தைச் செலுத்தும் சக்தி எப்படி உண்டாகிறது என்றால் இடி, பட்டாசு, போன்ற சப்தங்கள் கேட்கும் போது மனம் படபடக்கிறது. எரிச்சல் உண்டாகிறது. பய எண்ணங்கள் உண்டாகிறது.

தாலாட்டு கேட்கும் போது மனம் அமைதியாகிறது. மனத்தை உருக்கும் பாடலைக் கேட்கும்போது தன்னை அறியாமலேயே மனம் உருகி அதில் லயமாகிறது. ஒப்பாரியை கேட்கும் போது மனம் சோகத்தில் முழ்குகிறது.

எப்படி என்றால் ராகங்களின் மற்றும் சொற்களின் ஒலி அதிர்வுகள் நமது உடல் நரம்புகளில் ஊடுருவி ஒலி அதிர்வுகளுக்கு ஏற்றபடி நரம்புகள் துடிக்கின்றன. நரம்பு துடிப்புக்கு ஏற்றபடி சுவாச கதி (அளவு) மாறுகிறது. சுவாச மாற்றத்திற்கு ஏற்றபடி ரத்த ஓட்டம் மாறுகிறது. இதனால் மூளையின் செயல்பாடுகள் மாறுகின்றன. இந்த மாற்றங்கள்தான் அமைதி, கோபம், துக்கம் போன்ற எண்ணங்களை தூண்டுகின்றன. அர்த்தமுள்ள சொற்களின் ஒலிகள், மனதில் அந்த சொல்லின் வடிவத்தையும் உண்டாக்குகின்றன.

உதாரணமாக மயில் என்ற சொல் காதில் பட்டதும் அதன் உருவம் அழகிய நிறமுள்ள தோகை, அது ஆடும் அழகு முதலானவைகள் நம் மனக்கண் முன்னால் தோன்றுகின்றன. இவ்வாறுதான் மந்திரத்தை உச்சரிக்கும் போது அதன் பொருள், வடிவம் முதலானவை மனதில் ஒரு வித அதிர்வை ஏற்படுத்தி மன அமைதியையும் நம்பிக்கையையும் உண்டாக்குகிறது.

கோவில்மணி ஓசை காதிலுள்ள செவிப்பறையில் உரசும் போது கோவில் கோபுரம், தெய்வ உருவம், கோவில் அமைப்புகள் முதலான எண்ணங்களை மூளைக்கு அனுப்புகிறது.

தெய்வீக பாடல்கள் எல்லாமே மன அமைதி தரும் ராகங்களில் தான் அமைந்துள்ளன. ஆதலால் பாடல்களால் வழிபடும்போது நரம்பு அதிர்வுகளைச் சீராக்கி சுவாசம், ரத்த ஓட்டம், மூளை அலைகள் என எண்ணங்களுடன் தொடர்புடைய ஒவ்வொரு அம்சமும் மனமும் அமைதி அடைகிறது..

## அங்கப்பிரதக்ஷிணமும் - அடிப்பிரதக்ஷிணமும் அக்குபஞ்சர் - அக்யுபிரஷர்

இந்து மதத்தில் அங்கப் பிரதக்ஷிணம் என்ற ஒரு பிரார்த்தனையுண்டு இது கோவில் பிரகாரம் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளதால் அதில் மேடுபள்ளங்கள் உள்ளது. அதில் படுத்து உருளும் போது நம் உடலிலுள்ள வர்ம மையங்கள் தரையில் கருங்கல் மீது அழுத்தும் போது நரம்புகள் தூண்டப்பெற்று உடலுக்கு ஆரோக்கியத்தைக் கொடுக்கிறது. இதுதான் அக்குபிரஷர் சிகிச்சையாகும்.

இதுபோல் அடிப்பிரதக்ஷிணம் கால்களை ஒவ்வொரு அடியாக அழுத்தமாக விரலிலிருந்து நடுபாகமும் குதிகாலும் நன்றாகத் தரையில் அழுத்த அழுத்த ஒவ்வொரு காலையும் தூக்கி நடப்பதை அடிப்பிரதக்ஷிணம் அல்லது அடிவலம் வருதல் என்பர்.

இந்து கோவில்களின் தத்துவம் மனிதனின் உடல் நலத்தை ஒட்டியே உள்ளது. இந்த அடிப்பிரதக்ஷிணம் கோவிலில் செய்வதால் மனத்தை கடவுளின் பால் செலுத்தி உடல் பயிற்சி செய்வதால் மனநலம், உடல்நலம், கடவுள் அருள் என மும்முடி பலனைத் தருகிறது.

அடிப்பிரதக்ஷிணம் செய்வதால் கால்பாதம் நன்கு அழுத்தப்பெற்று உடல் எங்கும் ரத்தம் சீராகி புத்துணர்வு உண்டாகிறது. இதனால் கடுமையான தலைவலி; முதுகுவலி, சிறுநீரகக்கோளாறு, முழங்கால் வலி நீங்க வாய்ப்புள்ளது.

முன்காலத்தில் திருமணமாகாத பெண்கள் அடிப்பிரதக்ஷிணம் செய்தால் விரைவில் திருமணமாகும் என்ற நம்பிக்கை உண்டு.

ஏனென்றால் இவ்விதம் அடிப்பிரதக்ஷிணம் செய்தால் நோய்கள் தீர்வதோடு மிகவும் மெலிந்தே உடல் உள்ள பெண்களும் மிகவும் பருத்த உடல் உள்ள பெண்களும் அளவான சீரான உடலைப் பெறுகிறார்கள். அதனால் இவர்களுக்கு வரன் கிடைப்பதும் சுலபம் என்பது தான் கருத்து.

பால்குடம் சுமத்தல், காவடி எடுத்தல், அலகுகுத்துதல், காது, மூக்கு குத்துதல், மெட்டி, மோதிரம் அணிதல் போன்ற நமது வழிபாடும், சடங்கு முறைகளுமே அக்குபிரசர், அக்குபஞ்சராகும். இவைகள் தான் சீனாவிற்கு ஏற்றுமதியாகி மறுபடியும் இந்தியாவிற்கு இறக்குமதியாகி இருக்கிறது. சிலர் அக்குபிரஷர் காலணிகள் கூட உபயோகப்படுத்துவதும் இதனால் தான்.

நமது உடலில் பல நரம்பு முடிச்சுகள் உள்ளன. அவைதான் சக்தி மையம். அந்த மையங்களில் மாற்றம் ஏற்படும் போதுதான் உடலில் நோய்கள் உண்டாகின்றன. சக்தி மையங்கள் என்று ஆன்மீகத்தில் கூறுவதைத்தான் வர்வமையம் என்று மருத்துவம் சொல்கிறது. சக்தி மையம் பாதிக்கப்பட்டால் 'சிவம்' (உடல்) இயக்கமும் பாதிக்கப்படும்.

வலது கால் பெருவிரல் அடிபட்டால் தலையின் இடது பகுதியிலும் இடது கால் பெருவிரல் அடிபட்டால் தலையின் வலது பகுதியிலும் விண்ணென்று ஏறும், ஏசி அறையில் வெகுநேரம் இருந்தாலோ காதுகள் வழியாக தலையை பாதிக்கிறது.

கைமூட்டு, குதிகால், முழங்கால் மூட்டு போன்ற சில குறிப்பிட்ட பகுதியில் அடிபட்டால் ஷாக் அடித்தது போல ஒரு உணர்வு உண்டாகும். சில சமயம் நிலைதடுமாறி கீழேயும் விழ நேரிடும். ஏனென்றால் அந்த பகுதியிலுள்ள எளிய முறையில் சரி செய்யும் ஆரோக்ய வழிமுறைகள் தான் இந்து மதத்தில் இருக்கும் தோப்புக்கரணம், அங்கபிரதக்ஷிணம், கோவிலை வலம் வருதல், கன்னத்தில் போட்டுக் கொள்ளுதல், நெற்றியில் குட்டிக் கொள்ளுதல் முதலான முறைகள்.

பிள்ளையார்முன்பு நெற்றிப் பொட்டுப் பகுதிகளில் குட்டிக் கொள்ளுதல், காது மடலை பிடித்துக்கொண்டு அமர்ந்து எழுந்துதோப்புக்கரணம் செய்தல் ஆகியவைகள் ஏன் செய்கிறோம் என்றால் இந்தப்பகுதிகளில் முக்கியமான சக்தி (வர்மா) மையங்கள்

இருக்கின்றன. கழுத்து, காதுகளின் பின்புறம் தாடைப்பூட்டு ஆகிய பகுதிகளின் அருகில் வேகஸ் நரம்புகளின் முடிச்சுகள் இருக்கின்றன. இந்த நரம்புகளின் முடிச்சுகள் இதய துடிப்பைக் கட்டுப்படுத்துகிறது.

தோப்புக்கரணம் போடும்போது கைமூட்டுகள் கால் மூட்டுகளிலுள்ள வர்மா மையங்களில் அழுத்தம் உண்டாகிறது. நெற்றிப்பொட்டு, காது மடல்களிலும் அழுத்தம் ஏற்படுகிறது. இதனோடு வேகஸ் நரம்பின் இயக்கமும் இணைகிறது. இதனால் இதயத்துடிப்பு சீராகிறது. ரத்த ஓட்டம் சரிசெய்யப்படுகிறது. தோப்புக்கரணம் போடுவதால் கால் தொடை பகுதிகள் மடங்குகின்றன. தோள் கை இணைப்பு, மணிகட்டு இணைப்பு, இடுப்பு தொடை இணைப்பு, தொடைகால் இணைப்பு, கால் – பாதம் இணைப்பு என எல்லா இணைப்புகளிலுமுள்ள தசை எலும்பு நரம்பு மடங்கி நீட்டி நிமிர்த்தப்பட்டு வலிமை பெறுகின்றன.

ஆசிரியர் கேள்விக்கு தப்பாக பதில் கூறும் மாணவனை காதை பிடித்து முறுக்கும்போது அந்த மாணவனுக்கு ஞாபகம் வருகிறது. பண்டை காலத்தில் தமிழ்நாட்டில் போர்முறையில் ‘வர்மக்கலை’ என்ற முறையில் எதிரிகளை குறிப்பிட்ட முறையில் குறிப்பிட்ட இடத்தில் தாக்கினால் நிலை தடுமாறி துவண்டு விழுந்துவிடுவான். இதுதான் தற்கால ‘கராத்தே’.

இப்படித்தான் பாரதப் போரில் பீமன் கண்ணனின் சமிக்ஞையை புரிந்து துரியோதனனை கதையால் தொடையில் தாக்கி துரியோதனன் நிலைதடுமாறி கீழே விழுந்து இறந்தான். இதை வைத்துதான் நம் நாட்டு சில கதைகளில் இன்னார் உயிர் இன்ன இடத்திலுள்ளது. அந்த இடத்தை தாக்கி அவனைக் கொன்றான் என்றெல்லாம் எழுதப்பட்டுள்ளன.

குறிப்பிட்ட சில இடங்களில் உள்ள அத்தகைய மையங்களுக்கும் உடலிலுள்ள சில முக்கிய உறுப்புகளுக்கும் நேரடி தொடர்பு இருக்கிறது. எந்த எந்த புள்ளிகளுக்கும் எந்த எந்த உறுப்புகளுக்கும் நேரடி தொடர்பு இருக்கிறது என்று நமது முன்னோரான யோகிகளும் சித்தர்களும் அறிந்திருந்து நூல்கள் மூலமாகவும், பாடல்கள் மூலமாகவும் சொல்லியுள்ளார்கள்.

## மரணமும் மறுபிறவியும்

சூளையில் வேகதா மண் குடம் உடைந்தால் அந்த மண்ணைக் கொண்டே வேறு புதிய பானையை குயவன் உருவாக்குவான். ஆனால் சூளையில் வெந்த மண்பானை உடைந்தாலோ அதன் துண்டுகளை குயவனால் மீண்டும் உபயோகிக்க முடியாது. அது போல் உண்மை ஞானமாகிய அக்னியால் வெந்த ஒருவன் பரிபூரணமாக இருப்பானானால் அவனுக்கு மறுபிறவி கிடையாது.

வேகவைத்த நெல்லை பூமியில் விதைத்தால் அது மறுபடியும் முளைக்காது. அதுபோல் சித்தனான பிறகு ஒருவன் இறந்தால் அவனுக்கு மறுபிறவி இருப்பதில்லை. அச்சித்தன், சித்தனாகும் வரையில் திரும்ப திரும்ப பிறவி எடுக்க வேண்டும்.

## மலைக்கோயிலின் ஆற்றல்

நம் முன்னோர்கள், முனியவர்கள், சித்தர்கள் மலைகள் மீதும், குன்றுகள் மீதும் கடற்கடைகளிலும் நதிக்கரைகளிலும் கோயில் அமைத்து நதிகளில் நிரடாச் சொன்னதும், கோயில்கள் தோறும் மரங்களை நட்டுத் தனித்தனி தல விருட்சங்கள் என பெயரிட்டதும் மனிதன் உயிர் வாழ ஆதாரமான இயற்கை சக்தி கிடைக்கும் அறிவியல் நுட்பங்கள்.

கடற்கரையிலும் மலையிலும் உள்ள கோயில்களில் இந்த சக்தி இயற்கையாகவே பெரும் அளவில் கிடைக்கின்றது. மலை அருவிகள் பொழியும் இடத்திலும் இது நிறைந்திருக்கிறது. இதனால் மலைமீதும், கடற்கரையிலும் அருவிகள், நீர்வீழ்ச்சியாகப் பொழியும் இடங்களிலும் கோயில்கள் அமைத்துள்ளனர். திருச்செந்தூர், ராமேஸ்வரம் கன்னியாகுமரி போன்ற இடங்களில் கடற்கரைக் கோயில்கள் உள்ளன. பழனி, திருப்பதி போன்ற இடங்களில் மலைமீது கோயில்கள் அமைந்துள்ளன. குற்றாலத்தில் அருவி கொட்டும் இடத்தில் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. இன்று நகரங்களில் உள்ள அசுத்தமான சூழ்நிலையில் இந்த சக்தி வாய்ந்த பண்பு நமக்கு கிடைப்பதில்லை.

பழனி மலையில் போகர் மூலிகையைக் கொண்டு சிலை அமைத்ததால்தான் அந்த முருகன் சிலைக்கு அபிஷேகம் செய்யத பொருட்களை சாப்பிடுவதால் நோய்கள் நீங்குகின்றன என்று

கூறுகிறார்கள். இந்த மலைக் கோவில்களுக்குச் செல்வதால் மனஅமைதி, உடல் நலம் கிடைப்பது, இறைவன் அருளோடு இயற்கை சக்தியும், மூலிகை சக்தியும், மூலிகைகளின் காற்றை சுவாசிப்பதாலும், நடப்பதாலும், கடற்கரை பகுதியில் வாக்கிங் போனால் நல்லது என்று டாக்டர்கள் கூறுகின்றனர். ஆனால் இதை அன்றே உணர்ந்த நம் ரிஷிகளும், முனியவர்களும் சித்தர்களும், கடற்கரையில் கோயில்கள் கட்டி ஆன்மீகம் மற்றும் அறிவியல் ரீதியாக நமக்கு பலன் கிடைக்க வழிவகுத்துள்ளார்கள். கோவிலை வலம் வருவதால் மன அமைதியும், வாக்கிங் போனால் உடல் நலமும் கிடைப்பதால்தான் ஒவ்வொரு தெய்வமுள்ள கோவிலில் ஒவ்வொரு உடல் கூற்றுப்படி வலம் வர எண்ணிக்கையும் கூறியுள்ளார்கள்.

**நீராடுதல் :**

மனதில் நுழையும் எண்ணம் சுத்தமாக இருக்க வேண்டும். என்பதைத் தான் நீராடிய பின் கோவிலுக்கு செல்ல வேண்டும் என்ற கட்டுப்பாடு விளக்குகிறது. இதைத்தான் கோவில் பக்கத்தில் இருக்கும் திருக்குளமும் நினைவுப்படுத்துகிறது.

## ஆலய வழிபாட்டில் அறிவியல்

ஆலய வழிபாட்டில் அறிவியல் நுட்பங்கள் நிறைய பொதிந்துள்ளன. ஆலயங்கள், பிரமாண்டமான கட்டடங்களாக இருந்தாலும் சரி, சிறு கட்டடங்களாக இருந்தாலும் சரி. அவற்றின் வடிவமைப்பு முறைகள் பிரபஞ்ச சக்தியைக் கவர்ந்திழுத்து வைத்திருக்கும். கோவிலுக்குள் இருக்கும்போது பிரபஞ்ச சக்திகள் நமக்குள் ஊடுருவும் என்பதால் நமது உடல், மன ஆரோக்கியம், அதிகரிக்கும் கருங்கல்லில் ஒளி ஒலியைக் கடத்தும் அதிர்வுகள் அதிகம் இருப்பதால் தான் நம் முன்னோர்கள் கருவறைகளில் (கர்ப்பகிரஹம்) கருங்கல்லில் சிலை வைத்தனர்.

ஒரே மாதிரி அதிர்வுறும் காற்று மண்டலம் குறிப்பிட்ட அதிர்வெண் கொண்ட ஒலி பெரிய ஓசையை எழுப்ப வல்லது என்பது இயற்பியல் உண்மை.

ஆலய சிற்பங்கள் சிற்ப சாஸ்த்திரத்தின்படி உயரம், அகலம் மற்றும் கருவறை உள் அளவுப்படி வடிக்கப்படுகின்றன.

அப்பொழுதுதான் உள்ளே உச்சரிக்கப்படும் மந்திர ஒலி அதிர்வுகள் சிலையில் பட்டு பக்தர்களை அடையும். ஓம் என்ற ஒலிக்கு கருவறையில் காற்று மண்டலம் ஒரே மாதிரி ஒத்து அதிர்வுறும் படியே உள் அளவுகள் அமைக்கப்பட்டுள்ளன.

கருவறையின் வெளியே ஒரு இரும்பு துண்டில் மரக்கட்டையால் ஓங்கி அடித்தால் ஓசையை காதால் கேட்க முடியும். ஆனால் கருவறையின் உள்ளே இருந்து அதே வேகத்தில் கட்டையால் அடித்தால் ஒலி அதிர்வுகளை ஓம் என்ற உணர்வில் கேட்க முடியும். இந்த மெய்ஞான கருத்து விஞ்ஞான நுட்பத்தைக் கொண்டது.

## அபிஷேகம் - மருத்துவ பயன்

கற்சிலையில் தண்ணீர், பால், எண்ணெய், தேன், தயிர், விபூதி, குங்குமம் முதலிய ஒவ்வொரு பொருளையும் அபிஷேகம் செய்யும்போது மின்கடத்தும் திறன் வேறுபடுகிறது என்ற உண்மையை ஆய்வாளர்களே கண்டு கருதியுள்ளார்கள்.

மந்திரத்தால் உருவேற்றப்பட்ட புனித நீர் கற்சிலையின் மீது அபிஷேகிக்கப்படும் போது மந்திர சக்தியால் நீரில் அமைந்த ஆற்றல் சிலையில் வியாபிக்கும் வெண்மை, மஞ்சள், சிகப்பு, பச்சை முதலான வர்ணங்களில் அபிஷேகப் பொருட்கள் இருக்கும். இதை கண்ணில் காணும்போது இந்த வர்ணங்கள் கண்களில் படும்போது நரம்புத் துடிப்புகளை சீராக துடிக்க வைத்து மன அமைதியை ஏற்படுத்தும். இந்த வகையில் அபிஷேகத்தை காணும்பொழுது வர்ணசிகிச்சையில் கிடைக்கும் ஆரோக்கிய நலன்கள் கிடைக்கின்றன.

பூஜை முடிந்த பின் மாவிலை, துளசி, வில்வம், வேம்பு, அருகம்புல், தர்பை போன்ற புனித இலைகள் போடப்பட்ட தண்ணீரை கலசத்திலிருந்து எடுத்து பக்தர்கள் (நம்) மீது தெளிக்கும்போது நமக்குள் பிராணசக்தியும் நேரடியாக இறங்குகின்றன. எப்படி என்றால், இந்த நீரில் உள்ள புனித இலைகளுக்கு பிரபஞ்சத்தில் உள்ள பிராண (சுத்தமான ஆக்ஸிஜன்) கதிர்களையும் மந்திர உச்சாடன பூஜைகளால் சக்தியூட்டப்பட்டுள்ளன விக்ரகத்திலிருந்து வெளிப்படும் தெய்வீக கதிர்வீச்சுக்களையும் கவர்ந்திழுக்கும் சக்தி உண்டு. ஈரப்பதம்

கொண்ட காற்று மண்டலத்தில் பிராணவாயு (ஆக்ஸிஜன்)வின் அழுத்தம் அதிகரிக்கிறது. அக்காற்றின் பிராணவாயுவின் மூலக்கூறு அதிக அளவில் இருக்கும்போது அதை சுவாசிக்கும் போது மனிதன் மனம் உடல் இரண்டும் அமைதி அடைகிறது. இது அறிவியல் விளக்கம்.

எதிர் மின்னூட்டமும், ஈரப்பதமும் உள்ள காற்று மண்டலம் நம் திருக்கோயில் கருவறைகளில் நின்று நிலவுகிறது.

ஓம் என்ற மந்திரம் தொடர்ந்து ஒலிக்கும்போது அந்த ஒலி மூலஸ்தான கற்சிலையில் பட்டு எதிரொலிக்கிறது. அப்போது அங்குள்ள காற்று மண்டலம் பெரும் அலையையும் ஒரே மாதிரியான அதிர்வையும் பெறுகிறது. இந்த கருவறைகாற்று மண்டலத்தில் நிலவும் மூலக்கூறுகள் எதிரில் உள்ள அடியார்களைச் சென்றடையும் போது அவர்களின் மனம் அமைதி பெறுகிறது.

நன்றாக மின்சக்தியை ஏற்கக்கூடிய பொருட்களையே நாம் பூஜையில் பயன்படுத்துகிறோம். வேப்பிலை, மாவிலை, துளசி, எலுமிச்சைப்பழம், போன்றவைகளுக்கு இந்த பண்பு மிகவும் அதிகம், மந்திரங்களைச் சொல்லி மந்திரிக்கும் போது வேப்பிலை எலுமிச்சை பழத்தை உபயோகிப்பதற்கும் பண்டிகை நாட்களில் மாவிலை, துளசியை நாம் உபயோகிப்பதற்கும் இதுதான் காரணம் இதனாலேயே அபிஷேகம், அர்ச்சனை, ஆகியவற்றிலும் இவற்றை பயன்படுத்துகின்றனர்.

இந்த முறையில் நமக்கு எதிர்மறையான அயான்கள் (Nagative Ions) கிடைக்கின்றன. பிராண வாயு நமது ரத்தத்தில் ஹிமோகுளோபின் பண்பாகக் கலப்பதற்கு இது உதவுகிறது. கோயில்களில் பிரகாரங்களிலும் வெளியிலும் இருப்பதை விட பூஜை நடைபெறும் கர்ப்பகிரகத்தில் இந்த சக்தி அதிகமாகக் கிடைக்கின்றனது.

பஞ்சாமிர்தாபிஷேகம்

வாழைப்பழம், நெய், தேன், நாட்டுச்சர்க்கரை, கற்கண்டு.

இந்த ஐந்து பொருட்களை இணைத்து செய்யப்படுவது தான் பஞ்சாமிர்தம், இந்த கூட்டுப் பொருளில் உடலின் வெப்ப சமன்பாட்டு சக்தியை அதிகரிக்கும் அமிலச்சத்து அதிகமாக இருக்கிறது.

வெப்ப சமன்பாடு சக்திதான் உடலின் ஆரோக்கியத்திற்கு அடிப்படை இந்த சக்தியை அதிகரித்து நோய்களைத் தடுப்பதால் தான், ஐந்து பொருட்கள் இணைந்த 'அமிர்தம்' என்ற அர்த்தம் தரும் 'பஞ்சாமிர்தம்' என்று பெயர்.

## சிலை வடிவங்களின் ஆற்றல்

ஒவ்வொரு கோவிலிலும் உள்ள சிலை வடிவங்கள் வெவ்வேறு விதமான நுட்பங்களை பெற்றிருப்பவை. மனிதனின் பிரச்சனைக்கு தீர்வு கிடைக்க ஏற்றவாறு வடிவகைக்கப்பெற்றவை.

இன்று சூரியனைச் சுற்றி எல்லா கோள்களும் உள்ளன என்று கூறும் அறிவியல் கருத்தைத்தான் அன்று நம் முன்னோர்கள் முனிவர்கள், ரிஷிகள், அறிந்து கோவில்களில் நவகிரக சந்நிதியில் நடுவில் சூரிய பகவானையும், சூரியனைச் சுற்றி மற்றகோள்களையும் அமைத்தார்கள்.

ஒலியும், ஒளியும்தான் மனித ஜீவனின் படைப்பு ஆதாரம். இந்த ஒலியும் ஒளியும் இணைந்து அருள்தரும் அறிவாற்றல் மிக்க கலைக் கூடமே கோவில்கள்.

## மூலவர், உற்சவரின் - ஆற்றல்

கோயில்களை உருவாக்கும் போது கருவறைகளில் மந்திர ஜபங்களால் தெய்வீக ஆற்றலைக் குறித்து மூலவருக்கு 'சக்தி' யேற்றுவார்கள். கோயிலின் தெய்வீக சக்தி குவிந்திருக்கும் இடம் கருவறைதான். இதனால் இங்கு சிறப்பு பூஜை வழிபாடுகள் செய்யப்படுகின்றன. இந்த வழிபாடுகளின் போது வெளிப்படும் ஆன்மீக சக்திதான் மன, உடல் ஆரோக்கியத்தை அளிக்கிறது.

மூலவரை அடிக்கடி வெளியே எடுத்தால் கருறையில் இணைக்கப்பட்ட மந்திர சக்தி குறையும், இதற்காகவே பிரகாரசுற்று பூஜை திருவிழா போன்ற வேளைகளில் மூலவரின் வடிவில் இருக்கும் உற்சவரைப் பயன்படுத்துவார்கள், இந்த வேளைகளில் மூலலவரின் சக்தியை உற்சவருக்கு மந்திர பூஜைகளால் இடம் மாற்றுவார்கள்.

மூலவர் மனமும் உற்சவர் உடலும் ஆகும். மனதும் செயலும் ஒன்றாக இருக்க வேண்டும். உள்ளொன்றுவைத்து புறமொன்று பேசக் கூடாது. என்பதை அறிவுறுத்துகிறது.

## வீபூதி, குங்குமம், சந்தனம் மருத்துவ குணம்

பிரசாதங்களை அணியும் போது நமது உடலுக்கு பிராண தெய்வீக சக்தி கிடைத்து ஆரோக்கியம் பலம் கிடைக்கிறது. இவற்றை நெற்றியில் அணிவதால் நெற்றியில் உள்ள உயிர் துடிப்பின் முக்கிய மையமான இந்தப் பகுதியை பாதுகாத்து பலப்படுத்தும், இதன் மூலம் நமக்கு உயிர் சக்தி அதிகரிக்கும். திருநீறுக்கு நீரை உறிஞ்சும் தன்மை உண்டு. மூளையை சீராக இயக்க வைக்கும் பல முக்கிய நரம்புகள் நெற்றி பகுதியில் அதிகம். இந்த நரம்பு பகுதிகளில் நீர் தேங்கினால் நரம்பு செய்பாடு பாதித்து மூளையும் பாதித்து பல நோய்கள் வரும். நெற்றியில் திருநீறு அணிவதால் நரம்பு பகுதிகளின் நீர் உறிஞ்சப்பட்டு நோய் அபாயம் நீங்கும். இது பசுஞ்சாணத்தால் செய்யப்பட்டது. இது வெண்மை நிறம் மனத் தூய்மையைச் செய்கிறது. பசுஞ்சாணம் ஒரு கிருமிநாசினி தற்காலத்தில் நிலத்தில் ராசாயன உரம் இடுவதால் பயிர்களின் தன்மை மகசூல் ஆகியவை பாதிக்கின்றபடியால் பஞ்சகவ்ய உரத்தையே (அதாவது பசுவிடமிருந்து பெறப்படுகிறசாணம், நீர், பால், மோர், நெய், கலவை) பயிர்களுக்கு இடுகின்றார்கள். சுடப்பட்ட பசுஞ்சாணத்தால் செய்த திருநீறைநெற்றியில் பூசுவதால் நினைவாற்றல் உண்டாகிறது. குழந்தைகளுக்கு நீர் கோர்த்துக் கொண்டு ஜலதோசம் வந்தால் சாஸ்திர ரீதியாக தயாரிக்கப்பட்ட விபூதியை வெதுவெதுப்பான தண்ணீரில் குழைத்து நெற்றியில் பத்து போடுவது நமது வழக்கம். இப்படிச் செய்தால் மண்டையில் உள்ள நீர் உறிஞ்சப்பட்டு ஜலதோஷம் நீங்கும். இதனால் தான் திருஞானசம்பந்தர் மந்திரமாவது நீறு எனப்பாடியுள்ளார். திரு மண்ணிற்கும் இந்த குணம் உண்டு. கண்ணின் இரப்பையில் சூட்டு கொப்பளம் வந்தால் திரு மண்ணை குழைத்து அந்த கொப்பளத்தின் மேல் போட்டால் கொப்பளம் விரைவில் உடைந்து சரியாகி விடும்.



# நல்வாழ்வு வாழ

*(தம்பதியருக்கு)*

*கவியரசு கண்ணதாசன்*

பக்திமிக்க பூஜையறை காதலர்கள் பள்ளியறை
சக்தியொடு நாயகனார் தவம்புரியும் மேருமலை
அக்கரையும் இக்கரையும் அதன்நடுவே காவிரியும்
பக்குவமாய் ஓடுதல்போல் பயிலுகின்ற கல்வியறை.
முற்றுமது காமசுகம் முளைக்கின்ற பூமியல்ல;
மற்றுமொரு ஜீவனுக்கு வரவுசெயால்ல வந்தஇடம்!

தம்பதிகள் உறவினிலே தாய்வயிற்றில் பிள்ளைவரும்
தாய்தகப்பன் குணம்போல் சேய்க்குணமும் தவழ்ந்துவரும்
ஆதலின் ஒன்றையொன்று அநுசரித்துப் போவதுதான்
காதலிலும் இன்பம்வரும்; கண்மணிக்கும் நல்லகுணம்!

காதலில் மனைவியர் கருவடைந்த பின்னாலே
ஐந்துமா தம்வரைக்கும் அழுவதென்ப தாகாது;
அன்னை அழுதாலோ அலறியவள் துடித்தாலோ
அங்கம் பழுதுபட்டு அழகிழந்த பிள்ளைவரும்;
கண்ணிரண்டும் கெட்டுவரும்; கைகால் விளங்காது;
வாய்மொழியும் தேறாது வாரிசுக்கும் உதவாது;
எப்போதும் சிரித்தபடி இருக்கின்ற பெண்மயில்தான்
தப்பாமல் நல்லதொரு தங்கமகன் ஈன்றெடுப்பாள்!

கணவன் அழகாகக் கண்மணியை எதிர்பார்த்தால்
மனைவி மனம்நோகும் வார்த்தைசொல்லக் கூடாது.
அன்பு மொழிபேசி அரவணைத்து எந்நாளும்
தன்னையே மனைவியவள் சார்ந்திருக்கச் செய்துவிட்டால்
பொன்னை வடித்ததுபோல் புத்திரர்கள் பிறப்பார்கள்!
கணந்தோறும் கணந்தோறும் கணவனையே நினைத்திருந்தால்
அவள்பெறும்ஓர் பிள்ளைஎன்றும் அப்பாவைப் போலிருக்கும்.

ஆளான பின்னாலே ஆண்டாண்டு பொறுத்தவள்தான்
நாளாகி வயதாகி நல்லமணம் முடித்தவள்தான்
ஆசை நிறைந்தாலும் அடக்கம் மிகுந்தவள்தான்
ஆனாலும் அந்த அழகுமயில் வாழ்க்கையிலே
சூலான பின்னால்தான் சுகம்காணும் மயக்கம்வரும்!
தேடும் மனையாளைத் திருப்தியுடன் வைத்திருந்தால்
கூடுகின்ற சந்ததியும் குணத்தோடு வந்துதிக்கும்!

மணவாழ்வு வாழுகையில் மறுவார்த்தை ஆகாது!
'தாய்கொடுத்த சீர்வரிசை சகிக்கவில்லை' என்பதுவும்
ஜாடையாய்ப் பேசுவதும் தரம்குறைத்துக் காட்டுவதும்
'அப்பன் கொடுத்ததொரு ஆழாக்கு' என்பதுவும்
வடுவாக நின்றுவிடும் வாழ்நாளில் ஆறாது!

கொண்டவள்மேல் ஓர்பொழுது கோபம் வருமென்றால்
சண்டாளி சூர்ப்பனகை தாடகைநீ என்றெல்லாம்
அண்டாவில் அள்ளிவந்து அளந்துவைக்கக் கூடாது.
'நாளைக்கு பார்ப்போம், நடப்பதெல்லாம் நடக்கட்டும்'
என்றே படுத்துவிட்டால் எழுந்திருக்கும் வேளையில்
பெண்டாட்டி அன்புவரும் பெரிய நினைவுவரும்!
கடுகு அரிசியினைக் கற்தரையில் கொட்டிவிட்டால்
உடனே பொறுக்கி அதை ஓர்புறத்தில் சேர்த்திடலாம்
வார்த்தையினைக் கொட்டிவிட்டால் மறுபடியும் திரும்பாது!

ஆழாக்கு அரிசியிட்டு அதில்வாழ்வு வாழ்ந்தாலும்
தாளாத கதாலுடன் தாய்போல் ஊட்டிவிட்டால்
தேவர் அமுதமெல்லாம் 'சீ' என்றே ஆகிவிடும்!
வாழ்வதற்கும் தாழ்வதற்கும் மனசுதான் காரணமாம்
இன்பமென எண்ணிவிட்டால் எப்போதும் இன்பமயம்!
துன்பமெனத் தோன்றினாலோ தொலையாத துன்பமயம்!
ராமனது துன்பம் இனி நமக்குவரப் பேவதில்லை
சீதைபட்ட வேதனையைச் சிந்தித்தால் துன்பமில்லை!

ஆதாரம் ஒன்றையொன்று அண்டிநிற்க வேண்டுமென்றே
ஓர்தாரம் கொள்கின்றோம் உடனிருந்து வாழுகின்றோம்.
சேதாரம் என்றாலும் சேர்ந்துவிட்ட பின்னாலே
காதோரம் அன்புசொல்லிக் கலந்திருந்தால் துன்பமில்லை!
குற்றமெல்லாம் பார்த்துக் குறைபேசத் தொடங்கி விட்டால்
சுற்றமென ஏதுமில்லை சொந்தமென நாதியில்லை!
பற்றுவைத்தால் வைத்தஇடம் பம்பரம்போல் ஆடிவிடும்
தள்ளிவைத்தால் தங்கமதும் தவிடாக மாறிவிடும்!

'கையில்அரைக் காசுமில்லை கடன் கொடுப்பார் யாருமில்லை'
என்றிருக்கும் வேளையிலே இருப்பதையே பெரிதாக்கி
கொத்தாகக் கீரைதனைக் குழம்புவைத்துப் போட்டாலும்
சத்தமின்றிச் சாப்பிடுங்கள் தருவான் இறைவன்!
சண்டையிட்டு ஆவதென்ன சஞ்சலம்தான் மிஞ்சிவிடும்
அண்டை அயல்சிரிக்கும் அத்தனையும் கேலிசெய்யும்!

பகலில் அக்கம்பக்கம் பார்த்தபின்னால் பேசுங்கள்;
அந்திபட்டால் எப்போதும் அதுகூடக் கூடாது!
வீட்டுக் கதைகளுக்கு விபரங்கள் வேண்டுமென்றால்
கூட்டாகக் கட்டிலிலே குலவுங்கள் பேசுங்கள்!
பால்கணக்கோ மோர்க்கணக்கோ பட்டெடுத்த கடைக்கணக்கோ
பேசும் கணக்கெல்லாம் பிறர்முன்னால் பேசாதீர்!
தப்புக் கணக்கென்று சந்தேகம் கிளப்பாதீர்!

பெண்டாட்டி தப்பென்று பிறர்முன்னால் சொல்லிவிட்டால்
கொண்டாட்டம் ஊருக்கு, கொட்டுவார் கையிரண்டை!
பால்போன்ற வேட்டியிலே பட்டகறை அத்தனையும்
பார்ப்பவர் கண்களுக்கு படம்போல் தோன்றிவிடும்!

நாட்டுமக்கள் வாழ்க்கையெல்லாம் நாலும் கலந்துதான்
வீட்டுக்கு வீடுஒரு விரிவான கதையிருக்கும்
உன்கதையைக் கேட்டதனால் ஊரார் அழுவதில்லை!
சிலரோ சிரிப்பார்கள்; திண்டாடு என்பார்கள்!
நாட்டிலா வாழுகிறோம்; நாலும் திரிந்திருக்கும்
காட்டில் உலாவுகிறோம்; கவனம் மிகத்தேவை!
எடுத்தஅடி ஒவ்வொன்றும் எச்சரிக்கையாய் விழுந்தால்
அடுத்தஅடி தப்பாது ஆண்டவனார் துணையிருப்பார்!
இந்துமதப் பெண்களது எத்தனையோ துன்பங்கள்
மவுனம்எனும் தீயினிலே மாயமாய்ப் போனதுண்டு

'வாய்க்கட்டு வேண்டும்' என்றும் வகையாய் உரைப்பார்கள்!
அதற்குப் பொருளிரண்டு: 'ஆகாத வார்த்தைகளை
ஊரெங்கும் வீசாமல் உள்ளே வை' என்பதொன்று;
'வாய்ச்சுவையை நாடி வயிற்றைக் கெடுக்காமல்
வாய்க்கட்டுப் போடு என்னும் வகையான புத்தியொன்று!
'பெருக்கத்து வேண்டும் பணி' வென்றும், எந்நாளும்
'சுருக்கத்து வேண்டும் உயர்' வென்றும் சொன்னார்கள்!

வற்றாத செல்வங்கள் வளமாகச் சேருகையில்
அடக்கம் பணிவிருந்தால் அனைவருமே மதிப்பார்கள்!
இவ்வளவு பணமிருந்தும் எவ்வளவு பணிவென்று
ஊரார் புகழ்வார்கள் உன்னடியில் பணிவார்கள்!

'கையில் பணமில்லை கடனாளி யாகிவிட்டான்'
என்றெல்லாம் ஊரார் ஏளனமாய்ப் பேசுகையில்
கைநிறை மோதிரங்கள் கடிகாரம் சங்கிலிகள்
பட்டாடை கட்டி பவனிவர வேண்டும் நீ!

அப்போது ஊரார் அதைஎன்ன சொல்வார்கள்?
‘எவனோ புளுகுகிறான்; இவனா கடனாளி?
பெண்டாட்டி பேரில் பெரியபணம் வைத்துள்ளான்’
என்பார்கள்; நீயே இன்னுமொரு தொழில் செய்தால்
அவரே பணம்தந்து ஆதரிக்க வருவார்கள்!

நான்குபுறம் கத்தி நடுவிலொரு முள்வேலி
முள்வேலி மீதே மோகனமாய் நாட்டியங்கள்.
இதுதானே வாழ்க்கை! எதற்குக் கலங்குகிறாய்?
காலத்தைப் பார்த்துக் கணக்காய்த் தொழில்செய்தால்
ஞாலமே உன்கையில்; நவின்றாரே வள்ளுவனார்!
நீரில் அழுக்கிருந்தால் நீரருந்த மாட்டோமா?
காய்ச்சிக் குடிக்கின்றோம்; கவலைக்கு வேலையென்ன?

‘இடுக்கண் வருங்கால் நகு’ என்றால் எந்நாளும்
அடுத்து வருவ ததுபோல் இருப்பதில்லை
சகடத்தில் ஏறிவிட்டால் தாழ்ந்தும் உயர்ந்தும்வரும்
இருட்டு வெளிச்சமென இரண்டுவைத்தான் பேரிறைவன்.
இன்ப துன்பங்களுக்கு இதுதான் நியதிஎன்றான்!
கோடை வெயிலடித்துக் கொளுத்துகின்ற வேளையிலே
அம்மா மழைஎன் றலறுகிறோம், மழைவந்து
வெள்ளம் பெருக்கெடுத்து வீதியையே மூழ்கடித்தால்
வெய்யிலையே தேடி விரிகதிரை வணங்குகிறோம்!

கூடும் குறையும் குறைந்ததெல்லாம் கூடிவிடும்;
வாடும் வறளும் வறண்டதெல்லாம் வளமாகும்
எப்போது எதுநடக்கும் இறைவனுக்குத் தான்தெரியும்.
நடைபோடும் யந்திரங்கள் இவ்வுலகில் ஏதுமில்லை
போடும் நடையைப் பொடிநடையாய்ப் போடுங்கள்
நடைபோடும் வேலைதான் நாம்செய்யக் கூடுவது!
பார்த்து நடந்து பக்குவமாய்த் தொடருங்கள்
அப்போதும் முதுகினிலே அடிவிழுந்தால் ‘எல்லாமே
தப்பாத ஈசன் சாட்டை’ யென எண்ணுங்கள்!
கண்ணீரால் எந்நாளும் கவலை மறைவதில்லை,
விண்ணாளும் வேந்தன் வீடுசெல்லும் காலம்வரை
எண்ணுவன எண்ணுங்கள்; இயங்குங்கள் துன்பமில்லை

- கவியரசு கண்ணதாசன்

# பொற்புற நெடுநாள் புவியில் வாழ்கவே !

(சௌந்தரா கைலாசம்)

நாகநாடிருந்து நற்மிழ் நாட்டுக்(கு) ஏகிக்
காஞ்சியை எழிலுறச் செய்தபின்
பூவிரி பொழில்களும பொன்விரி வயல்களும்
மேவிய காவிரிக் காவலன் வேண்ட
பூம்புகார் சென்று புவிபுகழ் விதமாய்த்
தீம்பிலா முறையில் திரவியம தேடி
அள்ளிக்கொடுத்து நல் அறம் வளர்ததிருந்த
வள்ளல்கள் மாண்புயர் நகரத் தார்களே!
பாய்மரக் கப்பலில் பலநிலம் சென்று
நேயம் நிறைந்த நெஞ்சுடன் வாணிபம்
செய்து குவித்த செல்வ மனைத்தையும்
தெய்வத் திருப்பணிக் கென்றே வழங்கியோர்!
வந்த குலத்தொரு வடுவது கண்டால்
தம் தலைதரவும் தயங்கா உள்ளத்தினர்!
மன்னர்பின் னோரென வாழ்ந்த நிலையினால்
தன்னிக ரில்லாத தகைமையோ ராயினர்!
வெள்ளிக் கதவம் விளங்குயர் மாளிகை
உள்ளினில் எங்குமே ஒளிரும் பொன்மயம்!
உண்ணும் வட்டிலும் உறங்கும் கட்டிலும்
பொன்னார் செய்து புளசித் திருந்தவர்!
நங்கையர் சோளிகள் நவரத் தினங்களே!
செங்கரச் சிறார்கள் தேர்வதும் அவற்றையே!
புகழிலும் பொருளிலும் புவியினர் வியக்க
நகரத் தார்தன் நாட்டில் திகழ்ந்ததைக்
கண்ட வளவன் கருத்தில் பயம்குடி கொண்டது!
வெம்பகை கொழுந்துவிட் டெரிந்தது!
இந்நிலை அறிந்த தென்னவன் வருகெனச்
சொன்ன தன்மையால் சோழமண் நீங்கிப்
பாண்டிய நாட்டிலே பாதம் பதித்தனர்!
ஆண்ட மன்னனும் ஆதர வளித்தனன்!
உரிமைகள் பலவும் உவப்புடன் நல்கினன்!
பெருமைகள் தந்து பேணவும் செய்தனன்!
பாண்டிய நாட்டினைப் பாரில் உயர்த்த
வேண்டிய யாவையும் விழைந்தவர் புரிந்தனர்!
கோவிலைக் கொண்டு கூவலயம் இதனில்

தேவரைப் போலவே திகழ்ந்தவா றிருந்தனர்.
சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கவும்
பொய்யிலா நெறியில் புவியது நடக்கவும்
அன்பும் அறமும் அளவிலா தொளிரவும்
பண்பும் பயனும் பரவிப் பெருகவும்
ஒப்பிலா வகையில் உதவிய தாலே
செப்பரும் புகழில் திளைத்து மகிழ்ந்தனர்!
மலையெனக் குவிந்த மணி பொன்னையும்
நிலையிலை யென்றே நெஞ்சிருந் தகற்றிப்
பரமனை இருத்திய பட்டிணத் தாரெனும்
பெரியவர் பிறந்தது நகரத் தார்குலம்!
தாயெனத் தக்க காரைக்கா லம்மையும்
ஈயவே வாழ்ந்த இயற்பகை யாரும்
நற்கவிக் கம்பரும் நல்லமர் நீதியும்
சிற்பரண் திருப்பதம் சிரம்கொள் மூர்த்தியும்
தோன்றிய தந்தத் தூய குலத்திலே!
ஆன்ற கவிகளும் அக்குலத் துதித்தனர்!
மாண்புயர் அக்கூர் மாசாத் தியாரும்
தேன்தமிழ் முத்தப்ப செட்டியார் தாமும்
பைந்தமிழப் பெருங்கடல் பண்டித் மணியும்
செந்தமிழ்ச் சண்முகச் செட்டியா ரவரும்
கரும்புக் கவிதரும் கண்ண தாசனும்
அரும்பும் மழலையர் அகத்துள் நிறைந்த
வள்ளியப் பாவும் வந்ததக் குலமே!
இல்லையென் றுரையா தீந்ததக் குலமே!
தேடிய தனைத்தையும் திருக்கரம் சிவக்க
ஈடிலாக் கல்விக் கெடுத்துக் கொடுத்த
அண்ணா மலையெனும் அற்புத மனிதரும்
எண்ணா தீந்த அழகப்ப னாரும்
பிறந்த பெருமையைப் பெற்றதக் குலமே!
சிறந்தவர் திருப்பெயர் விரித்திடிற் பெருகும்!
நகரத் தார்குல நல்லவர் கூடிப்
புகழ்மா மதுரையின் பொலிவுறக் கண்ட
சங்கம் இந்தத் தாரணி தன்னில்
அங்கயற் கண்ணியின் அருள்விழி நோக்கால்
பற்பல பணிகள் பயனுற ஆற்றிப்
பொற்புற நெடுநாள் புவியில் வாழ்கவே!

நாதன்தாள் வாழ்க!

# திருப்புகழ்

## திருமணப் பதிகம்

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து – வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் – வசை கூற
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப – மயல்தீர
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து – குறுகாயோ
மறிமா னுகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த – மதியாளா
மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த – அதிதீரா
அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சு
மடியா ரிடைஞ்சல் – களைவோனே
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த – பெருமாளே

## குழந்தைப் பேறு பதிகம்

சீலமுள தாயார் தந்தை மாதுமனையான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு – தடுமாறத்
தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போக என்று – தெருவூடே
வாலவய தான கொங்கை மேருநுத லானதிங்கள்
மாதர்மய லோடு சிந்தை – மெலியாமல்
வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழு மென்றன்
மாயவினை தீர அன்பு – புரிவாயே
சேலவள நாட னங்கள் ஆர வயல் சூழ மிஞ்சி
சேணிலவு தாவ செம்பொன் – மணிமேடை
சேரும ரேசர் தங்க ளூரிதென வாழ்வு கந்த
தீரமிடு சூரை வென்ற – திறல் வீரா
ஆலவிட மேவு கண்டர் கோலமுட னிடு மன்று
ளாடல் புரி யீசர் தந்தை – களிகூர
ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த
ஆதிமுத லா கவந்த – பெருமாளே

# ஆனைமுக விநாயகனே
# ஆறுமுகம் சோதரனே!

பிள்ளையார் பட்டி கற்பகமே
கலியுகம் கண்ட அற்புதமே
இருக்கும் இடத்தில் செல்வத்தை
கொட்டும் வலம்புரி விநாயகனே!

சிலையாய் உன்னை வடிக்கவில்லை
மலையாய் நீயும் நிற்கின்றாய்
தலையை நிமிர்ந்து பார்க்கின்றோம்
உன் தனிப்பெரும் அழகை ரசிக்கின்றோம்!

தங்கத்தில் உனக்கு மேலாடை
அருகம் புல்லில் பூ ஆடை
தீபங்கள் உனக்கு சேர்க்க
திருவீசா நீ அருள்புரிவாய்!

வேதத்தில் உனக்கு அபிஷேகம்
தமிழ் கவிதையில் உனக்கு அலங்காரம்
கொழுக்கட்டை அப்பம் பலகாரம்
எங்கள் வாழ்வுக்கு நீயே ஆதாரம்!

கறவைப் பசுக்கள் பலகட்டி
கறந்தபாலை குடம் கொட்டி
பாலில் உன்னை குளிப்பாட்டி
மகிழ்வோம் நீயே வழிகாட்டி!

ரோஜா கூட்டம் சேர்த்து வைத்து
அதனை உன்மேல் பூச் சொறிந்து
மலரும் விழிகள் நீ திறக்க
மலரும் வாழ்வும் இனி சிறக்க!

ஒன்பது கோவிலில் ஒரு கோவில்
செல்வம் கொட்டும் திருக்கோவில்
உலகம் அறிந்த தனிக் கோவில்
நாம் வணங்கும் அருட்கோவில்!

அருளிசைமணி
கோட்டையூர் காளநாராயணன்

## சந்த விருத்தம்

அன்பின் மலர்தூவி, அன்பின் அடிபாடி,
அன்பின் அருள்வேண்டி இருந்தேனை,
அன்பின் விழியால்உன் அன்பின் அருளயாவும்
அன்புமிகவாகத் தருவாய் நீ!

அன்பின் தமிழ்மேலர், தொண்டர் மறையான
அன்பின் அருட்பாவும் வரிகோவை,
அன்பின் முறையேழும் தம்பி புகழ்யாவும்
அன்பின் சிவமூலம் கவிபாட,

அன்பின் முருகோனும் அண்ணன் பிளையாரும்
அன்னை விளியாக மகிழ்வோளே
அன்பின் முதுகூடல், மன்னும் அடியாரின்
அல்லல் அயல்போக அருள்வோளே!

அன்பின் துணையோனும் அன்பின் வகைசேயும்
அண்டிஅடியோளும் நெடுவாயுள்
அள்ளும் நிதி, வீடும் அன்னை பெரிதாக
அன்பில் அருள்வாய் என் உமையாளே!

தூய மலைமகளுன் பேரை உரைசெயவும்
சூழும் சுகம்பலவும் நிறைவாக,
தானம் தவம்பலவும் நீண்டு மிகவுயரும்
தேவி வரம்பெறவும் வளமகும்

ஆய கலையுணர்ந்த மூவர் எழுமுறையும்
ஆறுமுகன்புகழும் வடலூரில்
ஆன அருட்பெரிய சோதி, திருவரியும்
ஆர்க்கும் இடும்மினெனும் திருமூலம்

தாயுன் அருள்பெறவும் தேர்ந்த இவர் மறைகள்
தேனின் இசைதனில்நல் துதிபாடத்
தேவி தினம்வருதல் வேணும் செககணண
சேரு செககணண நடையாளே!

சேயும் கணவன் அடியோளும் பணிநிதியும்
சீரும் உடனலமும் பெருவாக,
சேர, மிகவருள்நல் வாழ்வு விளங்கிடவும்
சேமம் நிறைவுதரும் உமையாளே!

R. சுந்தரராஜன்

## நீங்க முன்னாலே போங்க நாங்க பின்னாலே வாரோம்
## நாங்க பின்னாலே வாரோம் நீங்க முன்னாலே போங்க

அரோகரா என்றுசொல்லி ஆனந்தமாய் நடைநடந்து
ஆனந்தமாய் நடை நடந்து
பழனியப்பன் திருமுகத்தைப் பழனியிலே பார்த்திடவே
பழனியிலே பார்த்திடவே (நீங்க)

வேல்மயிலம் என்றுசொல்லி வேகமாக நடைநடைந்து
வேகமாக நடைநடந்து
அப்பன் பழனியப்பனையே ஆனந்தமாய்க் கண்டிடவே
ஆனந்தமாய்க் கண்டிடவே (நீங்க)

பழத்துக்காக சண்டைபோட்டுப் பழனிமலை வந்துநிற்கும
பழனிமலை வந்துநிற்கும்
பழனியப்பன் அருள்பெறவே ஆனந்தமாய் நடைநடைந்து
ஆனந்தமாய் நடைநடைந்து (நீங்க)

குன்றமெலாம் கோயில்கொண்ட தண்டபாணிப் பேரழகன்
தண்டபாணிப் பேரழகன்
தண்டம்கொண்டு பழனியிலே நின்றருளும் காட்சிகாண
நின்றருளும் காட்சிகாண (நீங்க)

தாமரையில் வளர்ந்தவனாம் தங்கத்தேரில் வருபவனாம்
தங்கத்தேரில் வருபவனாம்
சிங்கார வடிவேலன் சிரித்தமுகம் கண்டிடவே
சிரித்த முகம் கண்டிடவே (நீங்க)

பஞ்சாமிர்தக் குளியலிலே பழனியப்பன் சிரித்து நிற்க
பழனியப்பன் சிரித்து நிற்க
சிரித்து நிற்கும் ஆழகினையே பழனியிலே பார்த்திடவே
பழனியிலே பார்த்திடவே (நீங்க)

அரோகரா என்றதுமே ஆனந்தமாய் காட்சிதரும்
ஆனந்தமாய் காட்சிதரும்
வண்ணமயில் கந்தனவன் வடிவழகைக் கண்டிடவே
வடிவழகைக் கண்டிடவே (நீங்க)

பழத்துககாக சண்டைபோட்ட பாலமுருக பண்டாரமாம்
பாலமுருக பண்டாரமாம்
பஞ்சாமிர்தக் குளியலே மகிழ்ந்துநிற்கும் அழகைக்காண
மகிழ்ந்துநிற்கும் அழகைக்காண (நீங்க)

குன்றமெலர் கோயில்கண்ட நம்மசாமி தெண்டபாணி
நம்மசாமி தெண்டபாணி
சிங்கார வடிவேலன் சிரிப்பழகைக் கண்டிடவே
சிரிப்பழகைக் கண்டிடவே

ஆடிவரும் காலடிக்குள் அழகுமுகம் காட்டிடவே
அழகுமுகம் காட்டிடவே
ஓடிவரும் பழனியப்பன் பேரழகைக் கண்டிடவே
பேரழகைக் கண்டிடவே (நீங்க)

ஆறுபடை வீடுகண்ட ஆனந்தனாம் ஷண்முகமாம்
ஆனந்தனாம் ஷண்முகமாம்
கூறும் வினை தீர்த்துவைக்கும் குழந்தைவேலன் அருள்பெறவே
குழந்தைவேலன் அருள்பெறவே (நீங்க)

அழகுமயில் மீதமர்ந்து ஆனந்தமாய் காட்சிதரும்
ஆனந்தமாய் காட்சிதரும்
சிவபாலன் திருமுகத்தைப் பழனியிலே கண்டிடவே
பழனியிலே கண்டிடவே (நீங்க)

வேலெடுத்து விளையாடி வீரைக்கர் தானழித்த
வீரைக்கர் தானழித்த
மால்மருகன் வடிவேலன் திருவடியை வணங்கிடவே
திருவடியை வணங்கிடவே (நீங்க)

தங்கமகன் தருமதுரை தண்டபாணி நம்மஸ்வாமி
தண்டபாணி நம்மஸ்வாமி
சிங்கார வேல் பிடித்து சிரித்துநிற்குங் காட்சிகாண
சிரித்துநிற்குங் காட்சிகாண (நீங்க)

நெற்றிக கண்ணில் பிறந்துவந்த சித்திரமாம் சிங்காரமாம்
சித்திரமாம் சிங்காரமாம்

சுற்றி நிற்கும் பகையழிக்கும் சக்திவேலன் அருள்பெறவே
சக்திவேலன் அருள்பெறவே (நீங்க)

ஊஞ்சலிலே ஆடுகின்ற உலகாளும் தெய்வமப்பா
உலகாளும் தெய்வமப்பா
முருகனாடுகின்ற அழகினையே செம்மையில் கண்டிடவே
செம்மையில் கண்டிடவே (நீங்க)

தங்கரதம் கொண்டவனாம் தர்மதுரை ஆனவனாம்
தர்மதுரை ஆனவனாம்
சிங்கார வேல்பிடித்து சிரித்துநிற்கும் அழகைக்காண
சிரித்துநிற்கும் அழகைக்காண (நீங்க)

அள்ளித்தரும் வள்ளலான செந்தில்வடி வேலனப்பா
செந்தில்வடி வேலனப்பா
பழனியிலும் அருள்தருவான் பெற்றிடவே சென்றிடலாம்
பெற்றிடவே சென்றிடலாம் (நீங்க)

வள்ளியம்மை தெய்வானை வலமிடமாய் அமர்ந்திருக்க
வலமிடமாய் அமர்ந்திருக்க
புள்ளிமயில் ஏறிவரும் வடிவேலன் அருள்பெறவே
வடிவேலன் அருள்பெறவே (நீங்க)

அழகுமயில் மீதமர்ந்து ஆனந்தமாய் காட்சிதந்து
ஆனந்தமாய் காட்சிதந்து
பக்தர்நலம் காத்தருளும் பழநியப்பன் அருள்பெறவே
பழநியப்பன் அருள்பெறவே (நீங்க)

முன்னாலே போங்க
நாங்க பின்னாலே வாரோம்
நீங்க பின்னாலே வாங்க நாங்க முன்னாலே போரோம்

அருளிசைமணி நேமத்தான்பட்டி *சுப்பையா*

## முருகா எங்கே சென்றாயோ

எங்கே சென்றாயோ முருகா எங்கே சென்றாயோ
உன்னைத்தேடி அங்கே வருவேன் ஓடிப்போகாதே
முருகா ஓடிப்போகாதே

கார்த்திகைப் பெண்கள் கரத்தினிலே வளர்ந்த
இடத்தினைப் பார்க்கச் சென்றாயோ
சரவணப் பொய்கைக்குச் சென்றாயோ

வளர்ந்த இடத்தைப் பார்த்து மகிழ்ந்திட
திரும்பவும் சரவணை சென்றாயோ
நீ மறுபடி அங்கே சென்றாயோ (எங்கே)

பஞ்சாமிர்தம் பாலில் குளித்திட மலைக்குச் சென்றாயோ
பழனி மலைக்கே சென்றாயோ

பக்தர்கள் காவடி ஆட்டங்கள் கண்டிட
தேரில் சென்றாயோ தங்கத்
தேரில் சென்றாயோ (எங்கே)

ஊஞ்சலில் ஆடி மகிழ்ந்திட நீயும் மண்டபம் சென்றாயோ
செம்மடைப் பட்டிக்குச் சென்றாயோ
சிங்காரவேலுடன் ஆடியஅழகை ரசித்திடச் சென்றாயோ
முருகா ரசித்திடச் சென்றாயே (எங்கே)

தங்கத்தேரில் பவனியும் வந்திடப் பழனிமலைக்கு சென்றாயோ
தென்பழனி மலைக்கே சென்றாயோ

தண்டபாணியாய் நின்றுமகிழ்ந்திடப் பழனிமலைக்கே சென்றாயோ
மறுபடி அங்கே சென்றாயோ (எங்கே)

நாவல்பழத்தை ஔவைக்குத்தந்த இடத்தைக்காண சென்றாயோ
நாவல்மரத்தை நாடிச் சென்றாயோ
சுட்டபழம் எனச் சொல்லி மகிழ்ந்ததை
எண்ணி நீயும் சென்றாயோ
மறுபடி அங்கே சென்றாயோ (எங்கே)

அசுரர்படைதனை வென்ற இடத்தைப் பார்க்கநீயும் சென்றாயோ
செந்தூர்ப் பதிக்கே சென்றாயோ

அலைகள் ஆடும் அழகினை ரசித்திட
மயில் விட்டிறங்கிச் சென்றாயோ
மறுபடி கடற்கரை சென்றாயோ (எங்கே)

கிழவன்ஆன அழகினை எண்ணி சோலைமலைக்குச் சென்றாயோ
பழமுதிர் சோலைநீ சென்றாயோ

மரமாய் நின்ற இடத்தைப் பார்க்க மறுபடிநீயும் சென்றாயோ
முருகா தினைப்புனம் நீயும் சென்றாயோ (எங்கே)

அப்பன் மகிழ மந்திரம் சொன்ன மலைக்குநீயும் சென்றாயோ
சுவாமி மலைக்கே நீயும் சென்றாயோ

அப்பன் தோளில் அழகாய் அமர்ந்திட திரும்பவும் அங்கே சென்றாயோ
மறுபடி அங்கே சென்றாயோ (எங்கே)
வள்ளிதெய்வ யானைமகிழ்ந்தே உலவிடநீயும் சென்றாயோ
மனம் மகிழ்ந்திட நீயும் சென்றாயோ

வேலும்மயிலும் ஆடிடும் அழகினை பார்த்துமகிழ்ந்திடச் சென்றாயோ
ரசித்துப்பார்க்கச் சென்றாயோ (எங்கே)
பிரம்பினை எடுத்தே ஆட்டங்கள் ஆடிடச் சவுக்கைக்கும் நீ
சென்றாயோ
ஆறுகால் சவுக்கைக்கு நீயும் சென்றாயோ

பிள்ளையாய் மறுபடி மாங்கனி கேட்டிடக்
கயிலைமலைக்குச் சென்றாயோ முருகா
மறுபடி மலைக்குச் சென்றாயோ (எங்கே)

அருளிசைமணி நேமத்தான்பட்டி *சுப்பையா*



## பழனி ஆண்டி வாராண்டி

ஆண்டி வாராண்டி பழனி
ஆண்டிவாராண்டி!
அடியவரை காத்திடவே
ஆண்டிவாராண்டி! (கோரஸ்)

அரோகராக அரோகரா
அழகன் வாராண்டி!
ஆறுமுகக் கடவுள் எனும்
பேருகொண்டாண்டி! (1)

உறுதியுடன் நினைப்பவருக்கு
உடன் வருவாண்டி!
உண்மையுடன் பணிந்திடவே
உளம் மகிழ்வாண்டி! (2)

பழநிமலை மீதமர்ந்து
பாரை ஆள்வாண்டி!
பாடிவரும் பக்தர்களை
நாளும் காப்பாண்டி! (3)

ஔவைக்குப் பழம்தந்த
அன்புப் பேராண்டி!
அப்பனுக்கே பாடம்சொன்ன
சுப்பு வேலாண்டி! (4)

பாதம் நோக நடப்பவர்க்கு
துணை வருவாண்டி!
பழநியப்பா சரணமென்றால்
ஓடி வருவாண்டி! (5)

வேதனையை நீக்கி அவன்
வெற்றி தருவாண்டி!
வேண்டியது கிடைத்திடவே
அருள் புரிவாண்டி! (6)

– கவிஞர் அரிமழம் *ப. செல்லப்பா*

# எத்தனை பிறவி எடுத்தாலும்...

## பல்லவி

எத்தனை பிறவி எடுத்தாலும்
முத்துக்குமரா உனை மறவேன்!
கத்தும் எனது குரலோசை!
பக்திப் பெருகிட பாடிடுவேன்!!

## சரணங்கள்

அன்னை தந்தையை ஏன்துறந்தாய்?
பழநியில் தனியே ஏன் அமர்ந்தாய்?
சொந்தம் பந்தம் சில நாட்கள்
என்பதை தானோ உணர்த்துகின்றாய்!

ஆண்டவன் மகன் நீ என்றாலும்
ஆண்டியின் கோலம் ஏன் கொண்டாய்?
ஆசைகள் துறந்தால் அமைதி வரும்
என்பதை தானோ உணர்த்துகின்றாய்!

நாவினில் திருப்புகழ் மணக்கவைப்பாய்!
வழிநடைப் பாடல்கள் பாடவைப்பாய்!
விழுந்தும் எழுந்தும் நடக்க வைப்பாய்!
வாழ்க்கை தத்துவம் விளங்க வைப்பாய்!!

இருப்பிடம் உனக்கு குன்றமப்பா!
இதயத்தை உன்முகம் இழுக்குதப்பா!
ஒவ்வொரு படியாய் ஏறவைப்பாய்!
வாழ்வில் எங்களை உயரவைப்பாய்!!

- மு. அரங்கநாதன்
சென்னை

## முருகா! முருகா!!

சிரித்த முகம் ஒரு தனித்த எழில்என
விரித்த தமிழ்இறை முருகோனே! – இரு
கரங்கள் குவித்துனை துதித்த கணத்தினில்
வரம் அருள் திருப்புகழ் பெருமானே!!
தெறித்த சிவநுதல் நேத்ர மணித்திரள்
உதித்த நவமணி முருகோனே!
எதிர்த்த பகைஅது ஒடித்துப் பொடிபட
சக்தியின் வேல்கொண்ட பெருமானே!!
தந்தை தமக்கொரு மெய்ப்பொருள் இயம்பிய
தகப்பன் சுவாமி முருகோனே!
ஔவைக்கன்றொரு கனியை தந்ததன்
உட்பொருள் உரைத்த பெருமானே!!
இந்திரன் மகளொடு குறமகள் வள்ளியை
கொஞ்சிடும் மனங்குளிர் முருகோனே!
இசையால் நிதம்உனை இறைஞ்சிடும் அடியவர்
இன்னலை முறித்தருள் பெருமானே!!

– *மு. அரங்கநாதன்*, சென்னை

## வா வா முருகா

வா வா முருகா வடிவேலா
வந்தருள் தருவாய் வடிவேலா! கோரஸ்

1. வேலும் மயிலும் கொண்டவனே – என்
வினைகள் எல்லாம் தீர்ப்பவனே – உன்
காலைப் பிடித்தேன் அருள்தருவாய் – என்
கவலை எல்லாம் தீர்த்திடுவாய் (வா வா)

2. கருணை முகங்கள் ஓராறு – அருள்
பொழிந்திடும் கண்கள் ஈராறு
மாலவன் மருகன் படைஆறு – அதைப்
பாடிட வாழ்நாள் போதாது (வா வா)

3. மண்ணில் இருந்து உதித்தவனே
மனைவியர் இருவரைக் கொண்டவனே
மக்கள் உள்ளம் பொங்கிடவே
மாபெரும் உருவுடன் நின்றவனே (வா வா)

4. படைவீடாறிலும் அவன் ஆட்சி
பக்தர்கள் கண்டிடும் அருட்காட்சி
செருக்கை அகற்றிடும் அவன்மாட்சி
செல்வம் தந்திடும் அவன் காட்சி (வா வா)

*க.நா. நாச்சியப்பன்*

# "ஆறுபடையோன் அருள்"

வடிவேலா வடிவேலா வடிவேலா வா – வரம்
தந்திடவே தந்திடவே வடிவேலா வா

பழநிமலை பாலனுக்கு பழம்கொடுத்துப் பாரு
பாவங்களைப் போக்கிடவே பறந்துவரும் மயிலு
பார்வதியாள் மைந்தனுக்கு பாரெல்லாம் வீடு
பக்தர்குறை தீர்ப்பதிலே இவனுக்கில்லை ஈடு (வடிவேலா)

குன்றத்திலே குமரனுக்கு குறிஞ்சிமலர் கொடுக்க
குழந்தைகளைக் கொடுத்திடுவான் குடும்பங்களும் மணக்க
குறும்புக்கார சிறுவனுக்கு குணமென்னவோ தங்கம்
கொடுமைகளை வேரறுப்பான் குறிஞ்சிமலை சிங்கம் (வடிவேலா)

திருச்செந்தூர் முருகனுக்கு திருப்புகழைப் பாட
திருவருளைத் தந்திடுவான் உன்புகழும் ஏற
நினைத்தாலே போதும்அவன் நித்திரையில் வருவான்
நிலையான செல்வங்களை நிறையநிறையத் தருவான் (வடிவேலா)

பழமுதிரும் சோலைமலை செல்வனுக்குப் பாலும்
பஞ்சாமிர்தம் தரமனதும் பக்குவமாய் மாறும்
சேவர்கொடி கொண்டவனை சேவிப்போரின் துன்பம்
சேதாரமாகி அங்கு சேர்ந்துவிடும் இன்பம் (வடிவேலா)

சுவாமிமலை சித்தனிடம் சுமைகளைநீ கூற
சூட்சுமத்தைச் சொல்லிடுவான் சுகமாக வாழ
சூரனையும் வெற்றிகொண்ட வீரனையே நாடு
சூறாவளியாக வந்து பகைமுடிக்கும் வேலு (வடிவேலா)

திருத்தனிகை வேலனுக்குத் தினைமாவும் தேனும்
தந்துபாரு வாழ்க்கையிலே திருவிழாதான் நாளும்
திரும்புகிற திசையெல்லாம் தேவனவன் ரூபம்
தென்றலாக வந்துதரும் தேவைகளை நாளும் (வடிவேலா)

காவடியும் தூக்கிநாமும் கால்நடையாய்ச் செல்வோம்
கவிபாடி கந்தனையும் கண்குளிரக் காண்போம்
ஆறுபடை அழகனுக்கும் அரோகரா சொல்வோம்
அவனருளைப் பெற்றுநாமும் அவனியிலே வாழ்வோம் (வடிவேலா)

மு.ப.சா.அள.மு. அழகப்பன் (எ) வைத்தியநாதன
பி. அழகாபுரி – கீழ்ச்சிவல்பட்டி

## குகனை மணந்த குறிஞ்சி மலர்

(வள்ளி தாலாட்டுத் தொகுப்புக்கவிதை)

### வள்ளியின் பிறப்பு

ஆராரோ ஆரிரரோ ஆராரோ
ராராரோ ராரிரரோ ராராரோ
ஆரமுதே ஆரிரரோ ஆருயிரே ஆரிரரோ
அழகுக்கு அழகானால் ஆறுமுகன துணையாள்
(ஆரிரரோ)

வள்ளி என்றால் வள்ளி
வண்ணமலர் செண்டு வள்ளி
கொள்ளை அழகு வள்ளி
கொஞ்சு தமிழ் பேசும் வள்ளி

மலைமேல் படரும் வள்ளி
மஞ்சள் முகம் கொண்டவள்ளி
கலையில் சிறந்த வள்ளி
கந்தனுக்கு சொந்த வள்ளி

கொடியில் கிடந்து வள்ளி
கூவி அழும் போது
மடியில் எடுத்து வைத்து
மான் வேடர் முத்தமிட்டார்.

வாரி எடுத்து வைத்து
வண்ணமுகம் முத்தமிட்டார்
ஆரிரரோ பாட்டுப்பாடி
அன்பு முகம் முத்தமிட்டார்

குழந்தைத் திருவடிவை
கொஞ்சி நிதம் முத்தமிட்டார்
மழலைச் செல்வத்திற்கு
வள்ளி என்று பெயருமிட்டார்

வனத்தில் குறவர்களாம்
மான்பிடிக்கும் வேடர்களாம்

இனத்தில் தமிழர்களாம்
ஈடில்லா மறவர்களாம்

அள்ளி அள்ளி தூவுகின்றார்
அழகு மலர் ரோஜாவை
வள்ளியையும் தூங்கவிட்டார்
வண்ணமலர் தூவலிலே

முல்லைப்பூத் தொட்டிலிலே
முத்துவள்ளி தூங்குகிறாள்
மல்லிகைப்பூத் தொட்டிலிலே
மான்விழியும் தூங்குகிறாள்

பாட்டு மழை தேன்பொழிய
பச்சைக்கிளி தூங்குகிறாள்
காட்டுக்குள்ளே வள்ளியுமே
கனிமரம் போல் வளர்ந்து விட்டாள்

இல்லை ஒரு இணை என்றே
ஏந்திழையாள் வளர்ந்து விட்டாள்
சொல்ல முடியாது இங்கே
தூயமகள் வளர்ந்த கதை

**(தினைப்புனக்காவல்)**

காடு வெட்டி த்தீக் கொளுத்தி
கடின வயல் பல திருத்தி
மேடு பள்ளம் செப்பனிட்டு
மென்மையாக வயல்திருத்தி

தின்னதினை விதைத்து – வள்ளி
தேமொழியைக் காவல் வைத்தார்
அன்னம் போல் பெண்மயிலும்
அழகாகக் காவல் செய்தாள்

அறுக்க தினைவிதைத்து – வள்ளி
அருங்கிளியைக் காவல் வைத்தார்

வெறுக்காமல் வள்ளியுமே
விடியும் வரை காத்திருந்தார்

உழக்கு தினை விதைத்து – வள்ளி
ஓடிக்கிளி விரட்டி
வழக்கமாய் வருங்கிளியை
வள்ளிக்கிளி தான் விரட்டி

கோழி கூவு முன்னே
கோதை வள்ளி விழித்தெழுந்து
நாழிதினை விதைத்து வள்ளி
நடந்து கிளிவிரட்டி

குறுணித்தினை விதைத்து
கூவிகிளி விரட்டி
குருவி பறவை யெல்லாம்
கூவிநிதம் விரட்டி வந்தாள்

ஆலோலம் பாட்டுப்பாடி– வள்ளி
அழகாய் காத்ததினை
காலத்தால் அறுப்தற்கு தினை
கனிந்து நல்ல பதமாச்சே

**(கதிர்வேல் தேடிவந்தார்)**

சுப்பையா உன்றனுக்குத்
தூயமகள் வள்ளியென்று
சண்முகா உன்றனுக்குத்
தக்கதிரு வள்ளியென்று

வீணைகொண்ட நாரதரும்
வேலவர்க்கு சொல்லிவிட்டார்
மானைப் பிடிப்பதற்கு
மால்மருகன் ஆசைகொண்டார்

வெள்ளிமலை தெற்கே
விருவிமலை தென்மேற்கே

கொல்லி மலைக் குள்ளிருந்து
குமரவேலர் ஓடிவந்தார்

வண்டாடப் பூ மலர வள்ளி
வணங்காக்கக் கண்டாரோ
கொண்டாட அன்பு மலர் – வள்ளி
கோதையையும் கண்டாரோ

வள்ளி அழகுக்கும் – வனிதை
வலதுகைத் தேமலுக்கும்
முல்லை மலர்கண்களுக்கும் – வள்ளி
முழுநிலா முகத்திற்கும்

கன்னத்து மஞ்ளுக்கும் – கந்தையா
காதல் மிகக்கொண்டாரோ
அன்னக்கிளி நடையழகில் – ஆறுமுகர்
ஆசை மிகக் கொண்டாரோ

கூந்தல் அழகுக்கும் – சுப்பையா
கொள்ளை ஆசை கொண்டாரோ
பூந்தளிராம் சிரிப்பிற்கும் – சுப்பையா
பேராசை கொண்டாரோ

தினைப்புனமும் காத்து வள்ளி
திகைத்து நிற்கும் வேளையில்
வனத்திலிருக்கும் வேடரைப் போல
வந்தாராம் சுப்பையா

தேனும் தினைமாவும்
தெவிட்டாத முக்கனியும்
வேணுமென்று சொல்லி
வேடிக்கை செய்தாராம்

புள்ளிமான் புகுந்ததென்று சுப்பையா
புகுந்தார் தினைப்புனத்தே
வள்ளிமானை பிடிப்பதற்கு – சுப்பையா
வந்தார் வனந்தனிலே

ஓடினாள் வள்ளி – ஓடியே
ஒளிந்தாள் வனந்தேடி
தேடினார் முருகர் – வள்ளித்
திருவடிவைக் காணாமல்

**(குமரன் கிழவன் ஆனான்)**

நல்ல கிழவனைப் போல் – சுப்பையா
நடித்தாராம் தினைப் புனத்தில்
மெல்லச் சிரித்தாளாம் – வள்ளி
மெய்யதனைத் தெரியாமல்

மெத்தப்பசிக்குதென்று – சுப்யைா
வித்தை மெத்தச் செய்தாராம்
சுத்தப்பொய் என்று – வள்ளி
சுந்தரிக்குத் தெரியவில்லை

பாகும் தினைமாவும் – வள்ளி
பாங்காகக் கொடுத்தாளாம்
தாகமெடுக்கு தென்று – சுப்பையா
சாலங்கள் செய்தாராம்

குடிக்கத் தேன் கொடுத்தாளாம்
குறவள்ளி பெண்ணரசி
கொடுத்த தேன் குடிக்காமல் – சுப்பையா
குளத்தருகே அழைத்தாரம்

கூட்டி நடந்தாளாம்
கொம்பனையாள் வள்ளியரும்
ஆட்டங்கள் ஆடிச் – சுப்பையா
ஆரணங்கை கூட்டிச் சென்றார்

ஏதோ சிரமமென்று
எண்ணிவிட்டாள் வள்ளிமயில்
மாதோ நினைக்கவில்லை
மால்மருகன் நாடகத்தை

கானகத்தில் வாழுகின்ற
கன்னிவள்ளி நாயகிக்கு
எதைக் கண்டால் பயமென்றால்
ஏந்திழையாள் வள்ளியர்க்கு

சோனை புலி சிங்கமென்றால்
சிறிதளவும் பயமறியாள்
ஆனையென்று சொன்னாக்கால்
அதிகப்பயமுண்டு

வேட்டுவனாய் வள்ளியர்க்கு
வெள்ளானை கொண்டுவந்தர்
கட்டானை காட்டிச் சுப்பையா
கல்யாணம் செய்துவைத்தார்

வானகசூட்டி நின்றாளாம் – சுப்பையா
வள்ளிமணம் கொள்வதற்கு
தோகை கை கொடுத்தாராம – சுப்யை
தோளோடணைத்தாராம்

அண்ணாவைத் தானினைந்து
ஆரணங்கை மாலையிட்டார்
கொண்டார் மனைவியெனக்
கூட்டிவந்தார் தன்னருகே

ஒட்டுமான் ஓட்டி நின்றார்
ஒரு மான் கரை சேர்த்தார்
காட்டுமான் உன் பாதம்
கவரிமான் கண்மணியே

**(முருகன் வள்ளி திருமணம்)**

கிள்ளி வளையலிட்டுச் சுப்பையா
கிளி மொழியை மாலையிட்டார்

அடுக்கு வளையலிட்டுச் சுப்பையா
ஆரணங்கை மாலையிட்டார்

வைரவளையலிட்டுச் சுப்பையா
வள்ளியினை மாலையிட்டார்

பச்சை நிற வளையலிட்டுச் சுப்பையா
பசுங்கிளியை மாலையிட்டார்

மாலையிட்ட மன்னவராம் – சுப்பையா
மங்கை வள்ளி கரம்பிடித்தார்

சேலை விழியிலிட்டார் – சுப்பையா
தேர்ந்தெடுத்த பெண்ணரசி

வள்ளி தெய்வயானையுடன சுப்பையா
வண்ணமயில் மீதமர்ந்தார்

அள்ளி அருள் பொழிவான் சுப்பையா
அனைத்துலகும் இன்பமுற

புள்ளிமன் வள்ளியம்மை
பொதிகைமலை கதிர்வேலர்

வள்ளியம்மை ஈஸ்வரிக்கும்
வளம்கொழிக்கும் திருமணமாம்

பச்சை நிறம் வள்ளியம்மை
பவளநிறம் தெய்வயானை

ஜோதி நிறம் சுப்பையா
சொர்ணமயில் ஏறிவிட்டார்

கந்தையா முருகையா தாலேலோ
குமரையா வேலையா தாலேலோ

தொகுப்புக்கவிதை
*குறள் இலக்குவன்* காரைக்குடி

## காவிரிபோல் வளர்வோம்

அள்ளிக் கொடுப்பதில் வல்லமை பெற்றவன்
அப்பன் பழனியப்பன் – தினம்
அச்சம் தவிர்ப்பவன் ஆறுதல் சொல்பவன்
அப்பன் பழனியப்பன்.
கள்ளம் கபடம் இலாதவர் தம்மிடம்
காவலில் நின்றி ருப்பான் – அங்கு
கால்நடை யாய்வரும் மானிட ஜாதியைக்
கண்டுகளித்தி ருப்பான். (அள்ளி)

துள்ளிவரும் வடிவேலுக்கு மேலொரு
ஜோதிப் பிழம்புமுண்டோ? – அந்தச்
சுப்பையன் போலொரு அற்புத தெய்வத்தைச்
சொல்ல மொழியுமுண்டோ?
வெள்ளிமுகம் பனிரெண்டையும் கண்டபின்
வேறொரு சொர்க்கமுண்டோ? – ஆண்டி
வேஷத்திலாயினும் வீரத்திலாயினும்
வேலனை வெல்வதுண்டோ? (அள்ளி)

சித்தர் வணங்கிய சேவற்கொடியோனைச்
சேர்ந்து வணங்கிடுவோம் – அந்தச்
சிக்கலிலாயினும் செந்திலிலாயினும்
சென்று கனிந்துநிற்போம்!
பக்தருக்கென்று திறந்திருக்கும் தென்
பழனியைக் கண்டுகொள்வோம் – அங்கு
பாலபிஷேகமும் தேனபிஷேகமும்
செய்து பணிந்திடுவோம்! (அள்ளி)

செட்டி முருகன்எனும் பெயர்பெற்றவன்
தெண்டாயுத மல்லவோ! – அந்தச்
சித்திர வள்ளியும் சாடையில் மற்றொரு
செட்டி மகளல்லவோ!
கொட்டிக் கொடுப்பவன் கோவிலைப் பார்த்திட
கோஷ மிட்டோடிடுவோம் – முள்ளும்
குத்தட்டுமே கல்லும் தட்டட்டுமே வலி
கொஞ்சமும் கண்டுகொள்ளோம்! (அள்ளி)

ஆறும் அறுபதும் ஆனஇருபதும்
ஆடிநடந்து செல்வோம் – சில
ஆனந்தப் பாடல்கள் வேலனைப் பாடட்டும்
அன்புடன் ஊர்ந்து செல்வோம்!
ஊறுகள் நேரட்டும் உமையவள் மைந்தனை
உச்சத்தில் வைத்திருப்போம் – கையில்
உள்ளதை அன்னவன் கோவிலுக்கே தந்து
மிச்சத்தில் வாழ்ந்திருப்போம்! (அள்ளி)

வேலன் குமரன் திருச்செந்தில்
வேட்டுவன் கந்தனுக்கு – இரு
கால்கள் நடக்கின்ற நடையினில் தானுயர்
கனிவு நிறைந்திருக்கு!
காலம் வழிவிடும் கச்சிதமாய்ச் சென்று
கால்களிலே விழுவோம் – அவன்
கால்களிலே விழக்கால்கள் நடக்கட்டும்
காவிரிபோல் வளர்வோம்! (அள்ளி)

*அமரர் கவியரசர் கண்ணதாசன்*

## மயில்

"வேல் வேல் வேல் வெற்றி
வேல் வேல் வேல்" – கோரஸ்

மயில் வந்து ஆடுது மலை மேலே
குயில் வந்து பாடுது சிலை போலே
வேல் வந்து மின்னுது கண்ணெதிரே
வேலனைக் காணேனோ என்னெதிரே! (வேல்)

திருப்புகழ் பாடியே கைதொழுதேன்
கருப்புகல் நீங்கிட மெய்தொழுதேன்
விருப்புடன் வேண்டியே பாடுகிறேன்
விராலிமலை நோக்கி ஓடுகிறேன்! (வேல்)

சோலையில் வந்தால் குறைதீரும் – அந்தச்
சுந்தரப் புன்னகை நிறைவாகும்
மாலையில் மயங்கியே வாடுகிறேன்
மையலில் உன்னையே தேடுகிறேன்! (வேல்)

வள்ளிக்கு வாய்த்த வடிவழகா
அள்ளிட ஆவியே துடிக்குதப்பா!
சொல்லிச் சொல்லி என்னபயன்?–வந்து
நில்லு நில்லு என் கண்ணெதிரே! (வேல்)

## ஆடுக ஊஞ்சல் ஆடுகவே

ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே! – ஆடுக

ஆழிப் படுக்கை கொண்டோனின்
அருமை மருகா ஆடுகவே
ஊழி தாண்டி நிற்பானின்
உத்தமச் செல்வா ஆடுகவே! – ஆடுக

வாழும் மனிதர் யாவருக்கும்
வழிக்குத் துணையாம் வேலவனே
ஆளும் கவலை ஓடிடவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! – ஆடுக

ஆடகப் பொன்னால் ஊஞ்சலிட்டு
அதற்கு வயிரக் கயிறுமிட்டு
கூடிடும் அடியார் ஆட்டிடவே
குமரா ஊஞ்சல் ஆடுகவே! – ஆடுக

பாடுகள் குறைந்தே மாந்தரெலாம்
பண்பாய் வாழ்ந்து உயர்ந்திடவே
வாடிடும் பயிர்கள் வளம்பெறவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! – ஆடுக

முன்னே பின்னே சென்றாலும்
முளையில் ஒன்றி நின்றிடுமே
என்னே வாழ்க்கை என்றாலும்
எல்லாம் உன்னைச் சுற்றியதே! – ஆடுக

குன்றக் குடியாய் எமைக்காக்கும்
குன்றக் குடியில் வேலவனே
கண்ணே மணியே கதிர்வேலா
கவினார் ஊஞ்சல் ஆடுகவே! – ஆடுக

விண்ணவர் செல்வி தெய்வானை
வேடவர் மகளாம் வள்ளியுடன்
மண்ணகம் சுற்றும் மயிலேறி
மேதகு சேவற் கொடியாட! – ஆடுக

கொண்டிடுங் காதல் உணர்வோடு
கனிந்த நெஞ்சத் தூஞ்சலிலே
அன்புடன் ஏறி இனிதமர்ந்தே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! – ஆடுக

மண்ணைப் பிளந்து பெரும்பேட்டில்
மாபெரும் இருளுடை வடிவுடனே
பெண்ணின் நல்லார் இருவருடன்
பெருமயில் ஏறிவந்தவனே! – ஆடுக

கண்ணே தெரியாக் காட்டிடையே
கலங்கித் தவிக்கும் எங்களுக்கே
உன்னால் வழியும் தெரிந்துயர
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! – ஆடுக

ஆறடி நெடிதாம் உருவுடனே
அடியார் பக்தி உருவேற
பேரருள் கொண்டாய் பெரும்பேடா
பிள்ளைகள் நலிவினைப் போக்கிடவே! – ஆடுக

சீரடி வணங்கிட வந்துள்ளோம்
செல்வா அருளைத் தந்திடுவாய்
ஆரிருள் விலகி ஒளிபெறவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! – ஆடுக

*– மெ. மெய்யப்பன், காரைக்குடி*

# குமரனுட வேலு இது

குன்றுதோர் ஆடிவரும் குமரனுட வேலுஇது
கூடிவரும் பக்தர்களின் குறைதீர்க்கும் வேலுஇது
மயூர வாகனனின் மரகத வேலுஇது
மருதமலை ஆண்டவனின் மகத்தான வேலுஇது
கார்போல பொழிகின்ற கார்த்திகேயன் வேலுஇது
கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் வேலுஇது
சங்கடங்கள் தீர்க்கவரும் சண்முகனின் வேலுஇது
தண்டனைகள் அகற்றிவிடும் தண்டபாணி வேலுஇது!

(குன்றுதோர்)

குன்றக் குடிதனிலே குடியிருக்கும் வேலுஇது
மன்றம் விளங்கவரும் மன்னனுட வேலுஇது
பழநிமலை நோக்கிப் பறந்துவரும் வேலுஇது
கழனியிலே நிற்போரின் கண்துடைக்கும் வேலுஇது
ஊஞ்சலிலே ஆடிவரும் ஓம்கார வேலுஇது
மாஞ்சோலை வாழுகின்ற மன்னனுட வேலுஇது
அடையாளம் காட்டிநிற்கும் அழகான வேலுஇது
கடையாணி இல்லாமல் கரைசேர்க்கும் வேலுஇது

(குன்றுதோர்)

வையாபுரியோரம் வந்து நிற்கும் வேலுஇது
வாழ்வாங்கு வாழவைக்கும் வடிவேலன் வேலுஇது
எட்டுக்குடி நகர்க்கு எழுந்தருளும் வேலுஇது
கட்டிவரும் காவடியில் காட்சிதரும் வேலுஇது
சிக்கல் நகர்தனிலே சிரித்துவாழும் வேலுஇது
எக்கலைக்கும் மன்னனான நம்தலைவன் வேலுஇது
அண்டிவந்த பேருக்கெல்லாம் அபயமளிக்கும் வேலுஇது
கண்டி கதிர்காமத்தோனின் கனிவான வேலுஇது!

(குன்றுதோர்)

*கும. கரு. ராம. சொக்கலிங்கம் செட்டியார்*
தேவகோட்டை

## கந்தப் பலகாரம்

ஆண்டிமேல் ஆசையாய் ஓடையிலே – நல்ல
ஆகாரம் சேருது கூடையிலே
பக்தியாம் பசிவெறிப் போதையிலே – இந்தப்
பலகாரம் போதுமோ பாதையிலே!

கந்தனின் பூமுகம் மாவுருண்டை – அவன்
காலடித் தண்டையே முறுக்குவடை
கந்தனின் கால்விரல் தேன்குழலாம் – எங்கள்
கந்தனே நெய்வழி அதிரசமாம்!

தாமரை முகங்களோ தெங்கிளநீர் – நம்மைத்
தாங்கிடும் கைகளே செங்கரும்பாம்
கந்தனின் கால்விரல் தேன்கதலி – அவன்
கைவிரல் யாவையும் சீனிமிட்டாய்!

சட்டியில் வெந்ததைத் தின்பவரே – கந்த
சஷ்டியில் வந்ததை உண்பதற்கே
எட்டியே நாலடி போடுங்களே – வேல்வேல்
என்றோங்கி எல்லோரும் பாடுங்களே!

*"மகாகவி" டாக்டர் அர. சிங்காரவடிவேலன்*

## கந்த வடிவேலன்

சுட்டதிரு நீறெடுத்து தொட்டகையில் வேலெடுத்து
தோகைமயில் மீதமர்ந்த சுந்தரம் – அந்தக்
கட்டழகு கொண்டதொரு கந்தவடி வேலனைச்
சாற்றுவது ஆறெழுத்து மந்திரம்! (சுட்ட)

ஆறெழுத்து மந்திரத்தைத் தந்ததொரு சுந்தரத்தை
அந்திபகல் சிந்தனைசெய் நெஞ்சமே – அந்த
ஆறெழுத்து மந்திரத்தை யாரெடுத்து ஓதினாலும்
ஆறுமுகம் வந்துநிற்கும் முன்னமே! (சுட்ட)

கந்தனடியே நினைந்து சங்கத்தமிழ் மாலைகொண்டு
வந்தனை செய்வோர்கள்மனம் ஆறுமே – பரங்
குன்றுவளர் குகனோடு தங்கிவரவே நமக்குள்
பொங்கி வரும்செல்வம் பதினாறுமே! (சுட்ட)

*திருமதி சௌந்தரா கைலாசம்*

# செந்தில்வளர் கந்தன்

முருகா முருகா வேல் முருகா!
முருகா முருகா வேல் முருகா! – *கோரஸ்*

சந்தமிகு செந்தமிழில் மாலை தொடுத்தேன்
செந்தில்வளர் கந்தனிடம் தூது விடுத்தேன்!

அந்தமிகு குகன்நெஞ்சில் இடம்பிடித்தேன்
ஆறுமுகன் பேரழகைப் படம்பிடித்தேன்! (முருகா)

வண்ணமயில் வாகனத்தில் வேல்முருகன்
வள்ளிதெய்வ யானையுடன் மால்மருகன்

தென்னகத்தில் வாழுகின்ற சிலையழகன்
என்னகத்தில் காட்சிதந்தான் கலையழகன்! (முருகா)

வெண்ணீறு நெற்றியிலே பளபளக்க
வெண்ணிலவு கண்களிலே சிலுசிலுக்க!

பன்னீரும் மார்பினிலே கமகமக்கப்
பார்வதியின் பாலன்வந்தான் மனங்களிக்க! (முருகா)

ஓராறு முகம்கண்டேன் உளமகிழ்ந்தேன்!
ஈராறு விழிகண்டேன் எனைமறந்தேன்!

சீராளன் உருக்கண்டேன் செயலிழந்தேன்
செந்தா மரைப்பதத்தில் சரணடைந்தேன்! (முருகா)

முருகா எனஅழைத்தேன் முறுவல்கண்டேன!
குமரா எனஅழைத்தேன் குளுமைகண்டேன்!

கந்தா எனஅழைத்தேன் களித்துநின்றான்
கடம்பா எனஅழைத்தேன் கனிந்துநின்றான்! (முருகா)

பழநி பரங்குன்றம் திருச்செந்தூர்
பழமுதிர் சோலையுடன் சுவாமிமலை!

அழகிய திருத்தணிகை மருதமலை
ஆலயங்கள் யாவும் காட்டுவித்தான்! (முருகா)

*கவிஞர் மருதகாசி*

## என்னோடும் பேசு சாமிநாதா!

ஈசனோடு பேசியது போதுமே
என்னோடும் பேசுசாமி நாதனே
ஆசையோடு தமிழெடுத்துப் பாடினேன்
ஐயாஉன் திருவடியை நாடினேன்! (ஈசனோடு)

கண்சீறும் பொறியூறிப் பிறந்தவா
கமலத்தில் அன்றுநீயும் தவழ்ந்தவா
தண்ணீரில் சளியுனக்குப் பிடிக்குமே
சரவணத்துப் பொய்கைவிட்டு எழுந்துவா! (ஈசனோடு)

கடலோரம் நிற்பவனே சண்முகா
கடல்நீரால் உடலரிக்கும் அல்லவா
நடமாடும் மயிலேறி இங்குவா
நல்லமனக் கோயிலுண்டு தங்கவா! (ஈசனோடு)

குன்றத்திலே கல்யாணம் ஆனதால்
குவலயத்தை நீமறத்தல் நியாயமா
குன்றத்தையும் விட்டிறங்கி ஓடிவா
கொஞ்சுதமிழ் இசைகேட்டு ஆடிவா! (ஈசனோடு)

பன்னிரெண்டு கண்களாடுந் தெய்வமே
என்னைமட்டும் காணமனம் இல்லையோ
உன்னைவிட்டு யாரைஇனி நம்புவேன்
சண்முகனே என்னுடனே வம்புஏன்? (ஈசனோடு)

ஒன்றிரண்டு விழியேனும் திறந்திடு
ஓரவிழிப் பார்வையேனும் புரிந்திடு
என்றுமுனை நம்பிநின்றேன் வரங்கொடு
ஏற்றமுடன் யான்வாழ வரங்கொடு! (ஈசனோடு)

*"அருளிசைமணி" மீ. சேவுகன்செட்டி*

# வணிகர் குலத்துக்குத் தாயாவான்

அப்பன் பழநி அப்பனடா – அவன்
அரும்பெரும் திரவியக் கப்பலடா
அற்புதம் காட்டும் தலைவனடா – அவன்
அன்புக்குப் பணிசெயும் இறைவனடா!

காண்போம் நாம்அவன் படைவீடு – தம்பி
க்கால்வலி மறந்து நடைபோடு
கண்டால் நமக்கிலை ஒருகேடு – நீ
காவடி எடுத்து நடமாடு!

வணிகனின் குலத்துக்குத் தாயாவான் – அவர்
வளைவினில் ஓடிடும் சேயாவான்
கவிஞர்கள் பாட்டுக்கு வாயாவான் – எங்கு
கடும்பகை கண்டாலும் தீயாவான்!

ஆண்டிக்குப் பாரடி சாத்துப்படி – நாம்
ஆடிடப் பழநியில் தீர்த்தமடி
வேண்டிடும் வரம்தரும் தீபமடி – இதில்
வேதனையே இலை லாபமடி!

பழநிக்குப் போவதில் சுகம்அதிகம் – அவன்
பார்வையில் நிற்பதில் குணம்அதிகம்
விழுந்து வணங்கினால் வயததிகம் – அந்த
வீரன் தருவான் பணமதிகம்!

செட்டிமக்கள் இந்தப் பூமியிலே – பல
தெய்வத்துக் களித்தது கோடியம்மா
கட்டிய கோவில்கள் ஆயிரமே – அதில்
கந்தனின் கோவில்கள் யாவையுமே!

முருகப்ப னில்லாத ஊருமில்லை – ஒரு
முத்தைய னில்லாத வீடுமில்லை –
பழநியப்ப னின்றி வம்சமில்லை – எங்கள்
பரம்பரைக் கவனின்றி அம்சமில்லை!

கால்நடைப் பயணத்தில் ஓடிவந்தோம் – உன்
கருணைக்குத் தானுனைத் தேடிவந்தோம்
வேலெமைக் காக்கட்டும் வேலவனே – உன்
விழிஎமைக் காக்கட்டும் நாயகனே!

*அமரர் கவியரசர் கண்ணதாசன்*

## சிறுவாபுரி முருகன்

சிறுவா புரியில் முருகா உனது
சிந்தை இரங்காதோ? – நல்ல
சேதி வழங்காதோ? – நீ
பெறுவாய் தமிழை! தருவாய் அருளை!
பேரம் சரியிலையோ? – எனது
பெருமான் நீஇலையோ? (சிறுவாபுரி)

வாய்பே சாத ஊமையும் உனது
வாசலில் பேசியதாம்! – கவிதை
வண்ணம் பாடியதாம்! – இந்தச்
சேய்பே சிவரும் பேச்சில் முருகா
சிலையாய் ஆயினையோ? – ஊமைச்
செவிடாய்ப் போனினையோ? (சிறுவாபுரி)

வேலால் நடந்த கதைஉன் கதைஅது
விந்தைக் கதையாகும்! – உலகம்
வியந்து துதிபாடும்! – இன்று
காலால் நடந்த கதைஉன் கதைஅது
கண்ணீர்க் கதையாகும்! – உலகம்
கண்டு நகையாடும்! (சிறுவாபுரி)

எத்தனை எத்தனை தாயர் வயிற்றில்
ஏழை கிடந்தேனோ? – முருகா
இங்கு பிறந்தேனோ? – நான்
எத்தனை எத்தனை மாதர் சுகத்தில்
இதயம் களித்தேனோ? – இடர்
எய்தித் துடித்தேனோ? (சிறுவாபுரி)

அத்தனை வலியும் அத்தனை கிலியும்
அப்பால் விலகட்டும்! – நெஞ்சில்
ஆனந்தம் மலரட்டும் – வாழ்வில்
சித்திகள் எய்தச் சக்தி குமரா
சேவல் கூவட்டும்! – உனது
திருவருள் சேரட்டும்! (சிறுவாபுரி)

- அருட்கவி கு. செ. இராமசாமி

## தெண்டாயுதத்தானைக் கொண்டாடு மனமே!

ஆலோலம் பாடுகுற வள்ளியம்மை கழுத்தில்
அணியாரம் இட்ட பெருமான்
ஆகாயம் பூமியிடை நீராவிபோல் வடிவில்
ஆதாரமான பெருமான்!

மேலாளர் கீழாளர் பேதங்கள் இல்லாது
மெய்யாள வந்த பெருமான்
மின்னாகி இடியாகி மழையாகிக் காற்றாகி
விளைவாக நின்ற பெருமான்!

கோலாலம்பூரில் வளர்கோன் தண்டபாணி – இவன்
கோவில் கொண்டாடு மனமே
கூற்றேதும் வாராது கொடுநோயும் சேராது
குறையாத வாழ்வு மிகுமே!

ஒமென்ற சிறுமுட்டை உள்வீடு அவன் வீடு
உன்வீடும் அந்த இடமே
ஒசைக்கு மணியுண்டு பூசைக்கு மணமுண்டு
உன்வாழ்வு கந்தன் வசமே!

நாமென்ற ஆங்காரம் நமதென்ற எக்காளம்
நடக்காது வேலனிடமே
நடக்கட்டும் பார்ப்போ மென்றிருக்கட்டும் உனதுள்ளம்
நலம்யாவும் வீடுவருமே!

கோமன்னன் வாழ்கின்ற கோலாலம்பூர் செந்தூர்
கொடிகட்டி ஆளவிடுமே
கொண்டாடு கொண்டாடு தெண்டாயுதத் தானைக்
குறையாத செல்வம் மிகுமே!

*அமரர் கவியரசர் கண்ணதாசன்*

# அரஹரமுருகா ஆனந்தமுருகா

- அருளிசைமணி நேமத்தான்பட்டி சுப்பையா

அரஹரமுருகா ஆனந்தமுருகா ஜெயஜெயமுருகா சரணம்
அரஹரமுருகா ஆனந்தமுருகா ஜெயஜெயமுருகா
சரணம்,சரணம்

தங்கரதத்தில் பவனியும் வந்திடும் தெண்டபாணியே சரணம்
சிங்காரவேலுடன் பனிரெண்டாயுதம் கொண்டவேலவா சரணம்
சரணம் (அரஹரமுருகா)

அள்ளித்தந்திடும் வள்ளல்முருகா ஆறுமுகமே சரணம்
அலைகடல்தாண்டியும் கோயில்கள்கொண்ட தண்டபாணியே
சரணம் சரணம் (அரஹரமுருகா)

செந்தூர்ப்பகுதியில் சூரனைவென்ற சுப்ரமண்யமே சரணம்
செல்வவளங்கள் எல்லாம்தந்திடும் செந்தில்ஆண்டவா
சரணம்சரணம் (அரஹரமுருகா)

தந்தைமகிழ்ந்திட மந்திரம்சொன்ன தகப்பன்சாமியே சரணம்
பொங்கும்அன்பால் வரங்கள்தந்திடும் சங்கரன்புதல்வா சரணம்
சரணம் (அரஹரமுருகா)

குன்றக்குடியில் கோவில்கொண்ட குமரதெய்வமே சரணம்
என்றும்எங்களின் துணையாய்இருக்கும் ஷண்முகதெய்வமே
சரணம் சரணம் (அரஹரமுருகா)

சக்திக்கனலே சரவணமுருகா முத்துக்குமரா சரணம்
சங்கரன்மகிழ மந்திரம்சொன்ன சாமிநாதனே சரணம் சரணம்
(அரஹரமுருகா)

நெற்றியில்உதித்த சித்திரைநிலவே சிங்காரமுருகா சரணம்
வற்றாதஜீவநதியாய் நலங்கள் வழங்கிடும் தேவா சரணம்
சரணம் (அரஹரமுருகா)

ஆறுகால்சவுக்கையில் ஆனந்தநடனம் ஆடிடும்அழகே சரணம்
அருளாடி உருவினில் பிரம்பெடுத்தோடும் பழனியாண்டவா
சரணம் சரணம் (அரஹரமுருகா)

செம்மடைப்பட்டி ஊஞ்சலில் ஆடும் செல்வக்குமரா சரணம்
செட்டிமகன்எனப் பேருங்கொண்ட தெண்டபாணியே சரணம்
சரணம் (அரஹரமுருகா)

மரமும்ஆகிக் கிழமும்ஆகி மகிழ்ச்சியில்திளைத்தவேலா சரணம்
மாசிலாவள்ளி தனையும்மணந்த மன்னவா–தென்னவா
சரணம்சரணம் (அரஹரமுருகா)

அருணகிரியார் பாடலில்மகிழ்ந்த அழகேதமிழே சரணம்
அடியவர்நாங்கள் கண்டேமகிழ்ந்திட வருவாய்முருகா சரணம்
சரணம் (அரஹரமுருகா)

காவடிஆட்டம் கண்டேமகிழ்ந்திடும் கருணைக்கடலே சரணம்
பாடிடும்அடியவர் குறைகளைப்போக்கிடும் பழனித்தெய்வமே
சரணம் சரணம் (அரஹரமுருகா)

காவடிசுமப்போர் கால்நடைவருவோர் சொல்வதுமுருகா சரணம்
கஷ்டம்கவலை தீர்த்திடவேண்டிச் சொல்வதும்முருகா சரணம்
சரணம் (அரஹரமுருகா)

அரஹரமுருகா என்றதும்மகிழ்ச்சி கொண்டிடும் முருகாசரணம்
ஆடும்மயிலும் அற்புதவேலும் கொண்டமன்னவா சரணம்
சரணம் (அரஹரமுருகா)

*- அருளிசைமணி நேமத்தான்பட்டி சுப்பையா*

# முருகா உன்னைக் கண்டே மகிழ்ந்திட வருகின்றோம்

சக்திக்கனலே சரவணபவனே முத்துக்குமாரா முருகய்யா–
ஜெகமேபுகழும் உன்முகதெரிசனம் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
தங்கரதத்திலே பவனியும்வந்திடும் தண்டபாணியேமுருகய்யா
தண்டபாணியே முருகய்யா
சிங்காரவேலுடன் உந்தன் அழகைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

வேண்டும் வரங்கள் தருவதினாலே மீண்டும்பழனிவருகின்றோம்
மீண்டும் பழனிவருகின்றோம்
காவடிசுமந்தும் கால்நடைநடந்தும் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திகனலே)

செல்வவளங்கள் தருவதினாலே செந்தில்குமாரா
உன்அருள்வேண்டி
செந்தில்குமாரா உன்அருள்வேண்டி
செந்தூர்ப்பகுதியில் உன்முகதெரிசனம் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திகனலே)

மங்களஇசையுடன் மணவறையோகம் எண்ணம்போலத்
தருவதினாலே
எண்ணம்போல தருவதினாலே
திருப்பரம்குன்றம் திருமணக்கோலம் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

கஷ்டம்கவலை தீர்ப்பதினாலே கருணைவடிவே
திருத்தணிமுருகா
கருணைவடிவே திருத்தணிமுருகா

சாந்தம்தவழும் உன்முகதெரிசனம் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம்(சக்திக்கனலே)

திணைப்புனம்காத்த வள்ளிக்குறத்தியின் அழகினில்மயங்கிய
வடிவேலா
அழகினில்மயங்கிய வடிவேலா
பழமுதிர்சோலையில் எடுத்திட்டவேடங்கள் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திகனலே)

சிவனார்மகிழ்ந்திட மந்திரம்சொன்ன சிவகுருநாத சுவாமிநாதா
சிவகுருநாத சுவாமிநாதா
அப்பன்தோளில் அமர்ந்துள்ளஅழகைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

தோளில்சுமந்த காவடியாட்டம் கண்டதும்மகிழ்ந்திடும் கதிர்வேலா
கண்டதும் மகிழ்ந்திடும் கதிர்வேலா
தோகைமயில்மேல் அமர்ந்துள்ளஅழகினைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)
காவடிசுமப்போர் கால்நடைவருவோர் அழகினைரசித்திடும்
முருகய்யா
அழகினைரசித்திடும் முருகய்யா
ஆனந்தஊஞ்சல் ஆடிடும்அழகினைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

பெருமைகள்நிறைந்த பிரம்பினைஎடுத்து ஆடிடும்அழகே
முருகய்யா
ஆடிடும் அழகே முருகய்யா

ஆறுகால்சவுக்கையில் ஆனந்தநடனம் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டே மகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

தங்கக்தேரில் பவனிவந்திடும் சிங்காரவேலா சிவஷண்முகமே
சிங்காரவேலா சிவஷண்முகமே
மங்களம் தந்தெமை காத்திடும் உன்னைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

கார்த்திகைப்பெண்கள் கரத்தினில்வளர்ந்த கருணைவடிவே
வடிவேலா
கருணைவடிவே வடிவேலா
மாம்பழம்கேட்ட ஞானப்பழம்உனைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

செம்மடைப்பட்டி ஊஞ்சலில்ஆடும் செல்வக்குமரா முருகய்யா
செல்வக்குமரா முருகய்யா
சின்னக்குழந்தை உருவினில்உன்னைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டே மகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

நெற்றிக்கண்ணில் பிறந்தநன்மணியே சக்திக்கனலே முருகய்யா
சக்திக்கனலே முருகய்யா
சரவணபவனே திருமுருகாஉன்னைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

பன்னீர்சந்தனம் பாலில்தேனில் தினமும் குளித்திடும்
முருகய்யா
தினமும்குளித்திடும் முருகய்யா
பஞ்சாமிர்தக் குளியலில் உன்னைக் கண்டேமகிழ்ந்திட
வருகின்றோம்
கண்டேமகிழ்ந்திட வருகின்றோம் (சக்திக்கனலே)

*- அருளிசைமணி நேமத்தான்பட்டி சுப்பையா*

# சுப்ரமண்ய நாமாவளி

பாசிப் படர்ந்த மலை
பங்குனித் தேர் ஓடுமலை – பனை
ஊசிப் படர்ந்த மலை
உருத்தி ராக்ஷம் காய்க்குமலை! அரஹரரோஹரா

மலைக்குள் மலை நடுவே
மலையாள தேசமப்பா – நீ
மலையாள தேசம் விட்டு – உன்
மயிலேறி வருவா யிப்போ! அரஹரரோஹரா

அந்த மலைக்குயர்ந்த மலை
ஆகும் பழநி மலை
எந்த மலையைக்கண்டு – நான்
ஏறுவேன் உன் சந்நிதிமுன்! அரஹரரோஹரா

ஏறாத மலைதனிலே – நான்
ஏறிநின்று தத்தளிக்க – நீ
பாராமல் கை கொடுப்பாய்ப்
பழநி மலை வேலவனே! அரஹரரோஹரா

அஞ்சிகை கொஞ்சிவர – உன்
அழகுசடை மேற்புரள – உன்
குஞ்சுசடை மேதினிலே – ஒரு
குயிலொன்று கூவு தப்பா! அரஹரரோஹரா

வேலெடுத்து கச்சை கட்டி
வித விதமாய் மயிலேறி
கோலா கலத்துடனே
குழந்தை வடி வேலவனே! அரஹரரோஹரா

உச்சியில் சடை யிருக்க
உள்ளங் கையில் வேலிருக்க
நெற்றியில் திரு நீறிருக்க
நிலை யுமைய்யா இவ்வூரில்! அரஹரரோஹரா

நீலமய்யா உன் மேனி
நித்தமய்யா உன் சங்குநாதம்
தேரப்பா தைப் பூசம்
தேசத்தோர் கொண்டாட! அரஹரரோஹரா

இடும்பன் ஒரு புறமாம்
இரு புறமும் காவடியாம்
கடம்பவனம் கண்டு – நீ
காட்சிதர வருவா யிப்போ! அரஹரரோஹரா

காவியப்பா உன் சோமன்
கடுக்கனையா தங்க நிறம்
பாவிநான் என்று சொல்லி
பாராமல் இருக்க லாமோ? அரஹரரோஹரா

சூலா யுதம் கொண்டு
எமதூதர் எனை சுண்டக்கால்
வேலா யுதா என்றிடுவேன்
வரவேணும் அவ் வேளை! அரஹரரோஹரா

## முன்னோடிக் கருப்பர் துதி

காக்கும் தெய்வமே எங்கள்
கருப்ப தெய்வமே – நாங்கள்
நோக்கும் இடமெல்லாம்
உந்தன் வீரத்தோற்றமே!

அள்ளிச் சொருகிய மலர்
அழகுக் கொண்டையும் – வளர்
துள்ளு மீசையும் உந்தன்
எழிலைக் கூட்டுதே... (காக்கும்)

பகை யழித்திடும் – சிறந்த
பரந்த தோள்களும் – நல்ல
கருத்த மேனியும் – உந்தன்
வலிமை காட்டுதே... (காக்கும்)

காடு வீடெல்லாம் – உந்தன்
காவலில் உண்டு – உயர்
படிபதினெட்டும் – உந்தன்
பார்வையி லுண்டு... (காக்கும்)

ஜாதி மல்லிகை – உயர்
சாந்து ஜவ்வாது – மணக்கும்
சாம்பி ராணியும் – உந்தன்
வரவைக் கூறுதே... (காக்கும்)

சாய வேட்டியும் – உயர்
ஜரிகைப் பட்டுமே – உந்தன்
மேனி அழகிலே – தவழ்ந்து
மின்னிச் சொலிக்குதே... (காக்கும்)

வெள்ளைக் குதிரையும் – உயர்
வீச்சரி வாளும் – நல்ல
தண்டை கிண்கிணி முழங்க
இங்கு வாருமே... (காக்கும்)

சுழன்றா டிடும் – அழகுச்
சுக்கு மாந்தடி – எடுத்து
விளை யாடியே – ஐயா
ஓடி வாருமே... (காக்கும்)

கெட்டி மேளமே – கொட்டி
உனை யழைக்கவே – இந்தச்
செட்டி மக்களாம் – நாங்கள்
சேர்ந்து வணங்கிடும்... (எங்கள் காக்கும்)

*"அருளிசைமணி" கவிஞர் நேமத்தான்பட்டி சுப்பையா*

## கோட்டூர் மகாகாளர்

பல்லவி

"வாவா வாவா கருப்பையா – வரம்
தாதா தாதா கருப்பையா!"

சரணம்

சிருங்கபுரம் என்னும் கோட்டூரில்
சிங்காரமாய் வீற்றிருக்கும் கருப்பையா
எங்கள்குல நாயகரே வாவாவாவா
என்றென்றுமே இன்பம்நீ தாதாதாதா... 1

சத்தியத்தின் ஜோதியே கருப்பையா
சந்தானம் தருபவரே கருப்பையா
பக்தியுடன் வணங்கினேன் கருப்பையா – உன்
பதமலர் தரவேணும் கருப்பையா! 2
படிபதினெட்டும் கருப்பையா
பந்தள நாட்டில்நீ இருப்பையா
பாபங்கள் நீக்கநீ வாவாவாவா
பலகலை ஞானம்நீ தாதாதாதா! 3
இந்திராணி காவலனே கருப்பையா
எங்கள்குடி காப்பவனே கருப்பையா
மந்தாரம் வனம்நோக்கி வாவாவாவா
மகிழ்ச்சியை என்றும்நீ தாதாதாதா! 4
நல்லவர்க்கு வடிவான நாயகமே
அல்லவர்க்கும் வடிவான தாயகமே
நாயகியாள் செளந்தரம்நீ வாவாவாவா
நயினாரே நன்மைகளைத் தாதாதாதா! 5
பாருக்கு வாழ்வளிக்கும் கருப்பையா
காருக்குக் கைகொடுக்கும் கருப்பையா
கவலையை நீக்க வாவாவாவா – உன்
கருணையை என்றும்நீ தாதாதாதா! 6

- "அருளிசைமணி" கண்டனூர் கதி. ரெங்கநாதன்

## கருப்பர் வாரார்

வாராரய்யா வாராரு
கருப்பரிங்கே வாராரு
வாராரய்யா வாராரு
கருப்பரிங்கே வாராரு...

அள்ளி – முடிச்ச கொண்டையப்பா
அழகுமீசை துள்ளுதப்பா
வல்ல வேட்டிப் பட்டுடனே
வாராரய்யா – ராசாப்போலே (வாராரய்யா)

ஆளுயரம் அரிவாளாம்
அதுக்கேத்த கம்பீரமாம்
காலிலே – முள்ளுச் செருப்பாம்
கருப்பனுக்கே தனிச்சிறப்பாம் (வாராரய்யா)

வீச்சரிவாள் கையிலுண்டு
வேகமான குதிரையுண்டு
சுற்றிவரும் பகையழிக்கச்
சுக்குமாந் தடியமுண்டு (வாராரய்யா)
இடுப்பிலே சலங்கையுண்டு
இடிமுழக்கச் சிரிப்புமுண்டு
வாக்கிலே வலிமையுண்டு
வற்றாத கருணையுண்டு (வாராரய்யா)
கையிலே சவுக்குமுண்டு
கனகமணிச் சலங்கையுண்டு
பாற்கடலில் பள்ளிகொண்ட
பரந்தாமன் நாமமுண்டு (வாராரய்யா)
சந்தனமுண்டு ஜவ்வாதுண்டு
சாம்பிராணி வாசமுண்டு
சம்பங்கி ரோஜாமுல்லை
மணக்குதப்பா இங்கே இப்போ... (வாராரய்யா)

*- "அருளிசைமணி" கவிஞர் நேமத்தான்பட்டி சுப்பையா*

## அய்யன் வாரார், கருப்பர் வாரார்

அய்யன் வாரார்
மெய்யன் வாரார் – அழகர்
கோயில் மலை இறங்கிக்
கருப்பர் வாரார்!
வல்லவேட்டிப் பட்டுடுத்தி
வரிசைமணி நூலணிந்து
அண்ணன் வாரார் – ஆகாயக்
கருப்பர் வாரார்! (அய்யன்)
வீச்சரிவாள் கையிலேந்தி
வேகமான குதிரைஏறி
வள்ளல் வாரார் – ஆவடிக்
கருப்பர் வாரார்! (அய்யன்)
பூச்சொரியும் பார்வையுடன்
புகழ்விரிக்கும் சேவையுடன்
மன்னன் வாரார் – தொட்டியக்
கருப்பர் வாரார்! (அய்யன்)

முறுக்குமீசை துடித்திருக்க
முந்திவரும் அடியெடுத்து
அய்யன் வாரார் – வையக்
கருப்பர் வாரார்! (அய்யன்)
சாம்பிராணி வாசத்திலே
ஜவ்வாதுப் பொட்டிட்டு
செல்வர் வாரார் – சோணைக்
கருப்பர் வாரார்! (அய்யன்)
செங்கரையில் மேலேநின்று
செல்வமெலாம் தந்துநின்று
முன்னே வாரார் – முன்னோடிக்
கருப்பர் வாரார்! (அய்யன்)

- "அருளிசைமணி" கண்டனூர் கதி. ரெங்கநாதன்

## எனது பிரார்த்தனை

இறைவா,

பசி உள்ள இடத்தில் அன்பையும்
தவறு உள்ள இடத்தில் மன்னிப்பையும்
பிளவு உள்ள இடத்தில் ஒற்றுமையும்
பிழை உள்ள இடத்தில் திருத்தத்தையும்
ஐயமுள்ள இடத்தில் பற்றுதலையும்
விரக்தி உள்ள இடத்தில் சாந்தியையும்
இருள் உள்ள இடத்தில் ஒளியையும்
நான் வழங்கிடத் துணை செய்யும்.

பிறரிடம் நான் ஆறுதல் தேடுவதைவிட
பிறருக்கு ஆறுதல் தந்திடவும்
பிறர் என்னைப் புரிந்து கொள்ள வேண்டுமென்பதைவிட
பிறரை நான் புரிந்து கொள்ளவும்
அடுத்தவர்கள் மீது அன்பைப் பொழிந்திடவும்
பிறர் என்னில் அன்பு செய்திடவும்
நீர் அருள் தருவீராக!

அன்னை தெரசா

## ஜெய ஆஞ்சநேயா

ஜெய ஆஞ்ச நேயா!
ஸ்ரீராம தூதா!
பயம் போக்கும் வீரா!
பக்தர்கள்ச காயா!
(ஜெய ஆஞ்ச நேயா)

அஞ்சனா தேவிக்கு
மகனாக வந்தாய்!
ஆதவன் பின்சென்று
கலைஞானம் கண்டாய்
வஞ்சமற்ற சுக்ரீவன்
வாழ்வுபெறச் செய்தாய்!
மாமன்னன் ரகுராமன்
தாசனாக நின்றாய்!
(ஜெய ஆஞ்ச நேயா)

மாதவன் இராமன் சேதுவை எழுப்பி
மாகடல் மீது நடந்தான்! – அந்த
மாயவன் பேரால் தூயவன் நீயோ
வானிலே தாவிப் பறந்தாய்!
ஆதியும் அந்தமும் ஆனவள் ஆன
சீதையைக் கண்டு பணிந்தாய்! – நீ
அசுரர் இலங்கை முழுதும் எரித்தே
அண்ணல் திருவடி அடைந்தாய்!
(ஜெய ஆஞ்ச நேயா)

சஞ்சீ விமலை எடுத்தாய்! – நீ
தசகண் டன்கதை முடித்தாய்! – சி
ரஞ்சீவி ஆகி ஸ்ரீராமன் ஏறும்
சிங்காத னத்தைச் சுமந்தாய்!
(ஜெய ஆஞ்ச நேயா)

எதுவேண்டி னாலும் ஈவாய்! – நீ
எமையாளும் தெய்வம் ஆவாய்!
துதிபாடும் அன்பின் அடியார்கள் பக்கம்
துணையாக நின்று காவாய்! – நீ
துணையாக நின்று காவாய்!
(ஜெய ஆஞ்ச நேயா)

# ஸ்ரீ ராம ஜெயம்

பல்லவி

ராம ஜெயம்ஸ்ரீ ராமஜெயம்
ராம ஜெயம்நம் தேகபலம்!
ராம ஜெயம்ஸ்ரீ ராம ஜெயம்
ராம ஜெயம்நம் ஜீவரசம்! – ஸ்ரீ
ராம ஜெயம்நம் ஜீவரசம்! (ராமஜெயம்)

சரணங்கள்

ஓதிய நாவில், உணர்ந்தவர் நெஞ்சில்,
உலாவிடும் ராமஜெயம்!
உள்ளம் நினைத்ததை அள்ளி வழங்கி
உயர்த்திடும் ராமஜெயம்!
சீதை, இலக்குவன், மாருதி, வீடணன்
சீர்பெற்ற ராமஜெயம்!
சித்தி தரும்பதம்; சக்தி மயம்; சிவம்;
சீதா ராமஜெயம்! – ஜெயம்
சீதா ராமஜெயம்! (ராமஜெயம்)

ஆழ நெடுங்கடல் சேதுவி லேஅணை
ஆக்கிய ராமஜெயம்!
ஆங்கொரு கல்லிடைப் பூங்கொடி தோன்ற
அருள்தரும் ராமஜெயம்!
தேடி அடைந்தவன் வாலில் நெருப்பும்
சிலிரென்ற ராமஜெயம்!
சித்தி தரும்பதம்; சக்தி மயம், சிவம்;
சீதா ராமஜெயம்! – ஜெய
சீதா ராமஜெயம்! (ராமஜெயம்)

காயிற் சிறந்த சபரியை வாழ்வித்த
தாரகம் ராமஜெயம்!
தந்தையின் மேம்பட்ட விந்தைச் சடாயுவின்
தத்துவம் ராமஜெயம்!
சேயெனும் அங்கதன், நேயன் சுமந்திரன்
ஜீவிதம் ராமஜெயம்!
சித்தி தரும்பதம்; சக்திம யம்;சிவம்;
சீதா ராமஜெயம்! – ஜெய
சீதா ராமஜெயம்! (ராமஜெயம்)

காலன் நமைஅணு காமல் அரண்செய்து
காத்திடும் ராமஜெயம்!
காசித் தலத்தில்விஸ் வேசனும் ஓதிக்
களித்திடும் ராமஜெயம்!
சீலக் கலைகளில், நாலு மறைகளில்,
திததிக்கும் ராமஜெயம்!
சித்தி தரும்பதம்; சக்தி மயம்; சிவம்;
சீதா ராமஜெயம்! – ஜெய
சீதா ராமஜெயம்! (ராமஜெயம்)

பாதம் தொடங்கி நம் கேசம் வரைப்பரி
பாலிக்கும் ராமஜெயம்!
பக்குவ மாய்எட்டுத் திக்கிலும காவல்
படைத்திடும் ராமஜெயம்!
தீது புகாமல் ஓர் சேதம் வராமல்,
ஜெயம்தரும் ராமஜெயம்!
சித்தி தரும்பதம்; சக்தி மயம்; சிவம்;
சீதா ராமஜெயம்! – ஜெய
சீதா ராமஜெயம்! (ராமஜெயம்)

# நவக்கிரக தோத்திரம்

## சூரியன்

காசினி இருளை நீக்கும்
கதிர்ஒளி ஆகி எங்கும்
பூசனை உலகோர் போற்றப்
புசிப்போடு சுகத்தை நல்கும்
வாசி ஏழுடைய தேர்மேல்
மகாகிரி வலமாய் வந்த
தேசிகா எனை ரட்சிப்பாய்
செங்கதி ரவனே போற்றி!

## சந்திரன்

அலைகடல் அதனில் நின்றும்
அன்று வந்து உதித்தபோது
கலைவளர் திங்க ளாகிக்
கடவுளர் எவரும் ஏத்தும்
சிலைமுதல் உமையாள் பங்கன்
செஞ்சடைப் பிறையாய் மேரு
மலை வலமாய் வந்த
மதியமே போற்றி! போற்றி!

## செவ்வாய்

வசனநல் தைரியத் தோடு
மன்னவர் சபையில் வார்த்தை
புசபல பராக்ர மங்கள
போர்தனில் வெற்றி ஆண்மை
நிசமுடன் அவர வர்க்கு
நீள்நிலம் தனில் அளிக்கும்
குசன் நிலமகனாம் செவ்வாய்
குரைகழல் போற்றி போற்றி!

## புதன்

மதனநூல் முதல் நான்கு
மறைபுகழ் கல்வி மானம்
விதமுடன் அவர வர்க்கு
விஞ்சைகள் அருள்வோன் திங்கள்
சுதன் பசுபாரி பாக்கியம்
சுகம்பல கொடுக்க வல்லான்
புதன்கவி புலவன் சீர்மால்
பொன்னடி போற்றி போற்றி!

## குரு

மறைமிகு கலைநூல் வல்லோன்
வானவர்க்கு அரசன் மந்திரி
நறைசொரி கற்பகப் பொன்
நாட்டினுக்கு அதிப னாகி
நிறைதனம் சிவிகை மண்ணில்
நீடு போகத்தை நல்கும்
இறையவன் குரு வியாழன்
இருமலர்ப் பாதம் போற்றி!

## சுக்கிரன்

மூர்க்கவான் சூரன் வாணன்
முதலினோர் குருவாய் வையம்
காக்க வான்மழை பெய்விக்கும்
கவிமகன் கனகம் ஈவோன்
தீர்க்கவா னவர்கள் போற்றச்
செத்தவர் தமை எழுப்பும்
பார்க்கவன் சுக்கிரன் தன்
பாதபங் கயங்கள் போற்றி!

## சனி

முனிவர்கள் தேவ ரேழும்
மூர்த்திகள் முதலி னோர்கள்
மனிதர்கள் வாழ்வும் உன்றன்
மகிமையது அல்லால் உண்டோ

கனிவுள தெய்வம் நீயே
கதிர்சேயே காகம் ஏறுஞ்
சனியனே உனைத் துதிப்பேன்
தமியனோர்க்கு அருள்செய் வாயே!

## இராகு

வாகுசேர் நெடுமான் முன்னம்
வானவர்க்கு அமுதம் ஈயப்
போகும் அக்காலை உன்றன்
புணர்ப்பினால் சிரமே அற்றுப்
பாகுசேர் மொழியாள் பங்கன்
பரன்கையில் மீண்டு பெற்ற
ராகுவே உனைத் துதிப்பேன்
ரட்சிப்பாய் ரட்சிப் பாயே!

## கேது

பொன்னைஇன் உரத்தில் கொண்டோன்
புலவர்தம் பொருட்டால் ஆழி
தன்னையே கடந்து முன்னம்
தண்அமுது அளிக்கல் உற்ற
பின்னைநின் கரவால் உண்ட
பெட்பிணில் சிரம்பெற்று உய்ந்தாய்
என்னைஆள் கேதுவே இல்
விருநிலம் போற்றத் தானே!

## பொது

சூரியன், சோமன், செவ்வாய்,
சொற்புதன், வியாழன், வெள்ளி
காரியும் இராகு, கேது
கடவுளர் ஒன்பா னாமத்
தாரியல் சக்க ரத்தைத்
தரித்திரா் பூசித் தாலும்
பாரினில் புத்திரர் உண்டாம்
பாக்கியம் நல்கும் தானே!

## சனீஸ்வர ஸ்தோத்திரம்

பன்னிரண்டு வருடப் பஞ்சம் எக்காலத்திலும் பாரில் வரவேண்டாம் என்றும் வரம் கேட்டார் தசரதன்.

வேண்டிய வேண்டியாங்கு வழங்கி, தசரதரை வாழ்த்தினார் சனிபகவான்.

ஆயுதங்களைத் தேரில் வைத்த தசரதர், கீழே இறங்கி நின்று கைகளை மேலே கூப்பினார். சனி பகவானைத் தோத்திரம் செய்யத் தொடங்கினார்.

நம : க்ருஷ்ணாய நீலாய
சிதிகண்ட நிபாய ச!
நமோ நீல மயூகாய
நீலோத்பல நிபாய ச!!
நமோ நிர்மாம்ஸ தேஹாய
தீர்க்க ச்ருதி ஜடாய ச!
நமோ விசால நேத்ராய
சுஷ்கோதர பயாநக!!
நம: பௌருஷ காத்ராய
ஸ்தூலரோம்ணே ச தேநம:!
நமோ நித்யம் க்ஷுதார்த்தாய
ஹயத்ருப்தாய ச தேநம:!!
நமோ கோராய ரௌத்ராய
பீஷணாய கராளிநே!
நமோ தீர்க்காய சுஷ்காய
கால தம்ஷ்ட்ர நமோஸ்துதே!!

தசரதருடைய தோத்திரத்தால் சனி பகவான் பரமானந்தம் அடைந்தார். இந்தத் தோத்திரத்தை இனி எவர் தம்மெதிரே எடுத்து மொழிந்தாலும், அவர்களை வருத்துவதில்லை என்று உறுதி கூறினார்.

தாம் பீடிக்காதிருப்பதோடு, கிரகங்களில், யார் பீடிக்க வந்தாலும் தடுத்துக் காப்பதாக உவந்தருளினார்.

சனிபகவான் பேரருளுக்குப் பெரிதும் பாத்திரம் ஆன மகிழ்ச்சியில் தசரதர் மறுபடியும் தோத்திரம் செய்தார்:

கோண: சநைச்சர: மந்த:
சாயா ஹருதய நந்தந:!
மார்த்தாண்டஜ: ததா ஸௌரி:
பாதங்கி: க்ருத்ர வாஹந: !!
ப்ரஹமண்ய: க்ரூர கர்மா ச
நீலவஸ்த்ர: அஞ்ஜநத்யுதி:!
க்ருஷ்ண: தர்மாநுஜ: சாந்த:
சுஷ்கோதர வரப்ரத:!!
ஷோடசைதாநி நாமாநி
ய: படேச் சதிநே திநே!
விஷமஸ்தோபி பகவாந்
ஸுப்ரீதஸ் தஸ்ய ஜாயதே!!

(1. கோணன் 2. சநைச்சரன் 3. மந்தன் 4. சாயாஹருதய நந்தனன் 5. மார்த்தாண்டஜன் 6. ஸௌரி 7. பாதங்கி 8. க்ருத்ர வாஹனன் 9. ப்ரஹமண்யன் 10. க்ரூர கர்மன் 11. நீல வஸ்த்ரன் 12. அஞ்சநத்யுதி 13. கிருஷ்ணன் 14. தர்மாநுஜன் 15. சாந்தன் 16. சுஷ்கோதர வரப்ரதன் என்னும் பதினாறு திருநாமங்களையும் நாள்தோறும் பாராயணம் செய்பவனிடம் சனிபகவான் அன்பு காட்டுகிறார். அவன் துயரங்களை ஓட்டுகிறார்.)

பன்முறை சனிபகவானைப் பணிந்து எழுந்த தசரதர், அவர் இசைவு பெற்று, பூமிக்குத் திரும்பினார்.

எண்ணிய எண்ணியாங்கு
எய்துப, எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்.

ஊழையும் உப்பக்கம்
காண்பர், உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்.

என்னும் குறட்பாக்களுக்குத் தசரதர் வாழ்க்கை சிறந்த உதாரணம் ஆகின்றது.

இரும்பினால் செய்த பிரதிமையில் சனிபகவானை ஆவாகனம் செய்து, அரசிலைகளால் அர்ச்சித்து, எள் கலந்த உளுந்துச்

சோற்றை நிவேதனம் செய்து வழிபட வேண்டும். ஏதேனும் ஓர் இரும்புப் பொருளையோ (இரும்புச் சட்டி, இரும்பு விளக்கு), கருப்புப் பசு அல்லது எருமையையோ, கம்பளத்தையோ, வஸ்திரம் தட்சணை தாம்பூலங்களோடு உத்தம பிராமணருக்குத் தானம் செய்வது சனிக்கிரக பரிகாரம். இவ்வாறு தானமும் வழிபாடும் செய்ய இயலாத நிலையில், தசரதர் அருளிய சனி பகவான் தோத்திரத்தை ஜபித்தே தான–பூஜை பலன்களை அடையலாம் என்பது வழிவழியாக வரும் நம்பிக்கை.

நீலாய பரமேஷ்டினே!
வ்ருகோ தராய சித்ராய
சித்ரகுப்தாய வை நம:!!
சித்ரகுப்தாய வை நமோந்நம இதி!!

அனைத்தையும் அடக்கி ஆளுபவரே! அழிப்பவரே முடிப்பவரே! விவஸ்வான் திருக் குமாரரே! காகவடிவினரே! உயிர்த்தொகுதிகள் அனைத்தையும் ஒழிக்க வல்லவரே! பேராற்றல் பெற்றவரே தத்னன் என்னும் திருநாமம் கொண்டவரே! கரிய திருமேனி உடையவரே! எவராலும் வணங்கப்படும் எம்பெருமானே! பெருவயிறு தரித்தவரே! விசித்திரமான குணங்களை வெளிப்படுத்துபவரே! தனது ரகசியத்தைக் காத்துவரும் தரும தேவரே! உம்மை வணங்குகிறேன்! என்பது இதன் பொருள்.

தேவதை அதிதேவதை பிரத்யதி தேவதைகளின் மூலம் செய்யும் வழிபாட்டில் சனிபகவான் திருப்தி அடைகிறார். ஆனால் நேரடியாகத் தம்மையே வழிபடும் போதுதான் உள்ளம் உவந்து அள்ளி வழங்குகிறார்.

## மிருத்யுஞ்ஜய ஸ்தோத்திரம்

காலபாசம் கழுத்தில் விழுந்த நிலையில் மார்க்கண்டேய மகரிஷி சிவபெருமானுடைய திருவடிகளைச் சிக்கெனப் பற்றிக் கொண்டார். அப்போது அவர் திருவாய் மலர்ந்து அருளிய தோத்திரமே மிருத்யுஞ்ஜய ஸ்தோத்திரம்.

மிருத்யுஞ்ஜய ஸ்தோத்திரம் ஓதப்படும் இடத்தில் யமதருமனுக்கு வேலை இல்லை. அப மிருத்யுகை மட்டுமா? காலமிருத்யுவையும் இதனால் வெல்லலாம்.!

சனிக்கிரகம் உள்ளிட்ட கிரக தோஷம் அனைத்தையும் விலக்கும் சிவதோத்திரம்:

ருத்ரம் பசுபதிம் ஸ்தாணும்
நீலகண்டம் உமாபதிகம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 1
காலகண்டம் காலமூர்த்திம்
காலாக்நிம் காலநாசனம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 2
நீலகண்டம் விரூபாக்ஷம்
நிர்மலம் நிருபத்ரவம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 3
வாமதேவம் மஹாதேவம்
லோகநாதம் ஜகத்குரும்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 4
தேவதேவம் ஜகந்நாதம்
தேவேசம் வ்ருஷபத்வஜம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 5
த்ரயக்ஷம் சதுர்புஜம் சாந்தம்
ஜடாமகுட தாரிணம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 6
பஸ்மோத்தூளித ஸர்வாங்கம்
நாகாபரண பூக்ஷிதம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 7
அநந்தம் அவ்யயம் சாந்தம்
அக்ஷமாலா தரம் ஹரம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 8
ஆநந்தம் பரமம் நித்யம்
கைவல்ய பததாயினம்
நமாமி சிரஸா தேவம்

கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 9
அர்த்தநாரீ ச்வரம் தேவம்
பார்வதீ ப்ராணநாயகம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 10
ப்ரளயஸ்திதி கர்த்தாரம்
ஆதிகர்த்தாரம் ஈச்வரம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 11
வ்யோமகேசம் விரூபாக்ஷம்
சந்த்ரார்த்த க்ருதசேகரம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 12
கங்காதரம் சசிதரம்
சங்கரம் சூல்பாணிநம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 13
ஸ்வர்க்காபவர்க்க தாதாரம்
ஸ்ருஷ்டிஸ்தித் யந்தகாரிணம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 14
கல்பாயுர் தேஹிமே புண்யம்
யாவதாயுர ரோகதாம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 15
சிவேசானம் மஹாதேவம்
வாமதேவம் ஸதாசிவம்
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 16
மார்க்கண்டேய க்ருதம் ஸ்தோத்ரம்
ய:படேத் சிவ ஸந்நிதௌ
நமாமி சிரஸா தேவம்
கிந்நோ ம்ருத்யு: கரிஷ்யதி 17
ஸத்யம் ஸத்யம் புனஸ் ஸத்யம்
உத்ருத்ய புஜமுச்யதே
வேதா சாஸ்த்ராத் பரம் நாஸ்தி
ந தைவம் சங்கராத்பரம் 18

# ஆஞ்சநேய ஸ்தோத்திரம்

ஆஞ்சநேயருக்குச் செய்யும் அபிஷேக அர்ச்சனை வழிபாடுகளால் சனிபகவான் ஆனந்தம் அடைகிறார். ஆகவே அஷ்டமச்சனி, ஏழரைச்சனி, சனிதசா புத்தி தோஷங்கள் விலக ஆஞ்சநேயரை ஆராதனை செய்வது மரபு. பின் வரும் ஆஞ்சநேய சுலோகங்களையும் ஓதுவதால் சனிக்கிரக தோஷ நிவாரணம் பெறலாம்.

ஓம் அஸாத்ய ஸாதக ஸ்வாமின்
அஸாத்யம் கிம் தவ ப்ரபோ!
ராம தூத மஹாப்ராக்ஞ்ய
மம கார்யம் ஸாதயா!!

(இராமதூதரே! பெரும்புகழ் பெற்றவரே! செயற்கரும் செயல்களைச் செய்து முடித்தவரே! உம்மால் ஆகாததும் உளதோ? அடியேன் மேற்கொண்ட செயல்களில் வெற்றி தந்து அருள் புரிவீராக!)

ஓம் புத்திர்பலம் யசோ தைர்யம்
நிர்பயத்வம் அரோகதா!
அஜாட்யம் வாக் படுத்வம் ச
ஹநூமத் ஸ்மரணாத் பவேத்!!

(தம்முடைய திருநாமங்களை இடைவிடாது மொழியும் அன்பர்களுக்கு அறிவு, வலிமை, புகழ், அஞ்சாமை, மனஉறுதி, நோய்நொடி இன்மை, வாக்குநலம் என்னும் அனைத்து மேன்மைகளயையும் ஆஞ்சநேயர் அள்ளி வழங்குகின்றார்.)

ஆஞ்சநேயம் அதிபாட லானனம்
காஞ்சநாத்ரீ கமநீய விக்ரஹம்
பாரிஜாத தருமூல வாஸிநம்
பாவயாமி பவமாந நந்தனம்

(பொன்மலை போன்று பொலிந்து தோன்றுபவரும், பாரிஜாத நீழலில் பரிந்து காட்சி தருபவரும், வேண்டிய வேண்டியாங்கு தருபவருமான ஆஞ்சநேயரை வணங்குவோமாக)

யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்
தத்ர தத்ர க்ருதமஸ்த காஞ்சலிம்
பாஷ்ப வாரிம் பரிபூரண லோசனம்
மாருதிம் நம: ராக்ஷ ஸாந்தகம்

(கூப்பிய கைகளோடு இராம நாமம் கேட்டுக் குழைந்து உருகுபவரும், அகன்ற கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரிய ஆடிக் களிப்பவரும், அசுர குலத்தை அழித்தவருமான ஆஞ்சநேயரை வணங்குவோமாக)

## எச்சரிக்கை

சீர்வள ருங்கதிர் மாமலை மேவிய
செந்தமிழின் வாசா!
செந்தமிழின் வாசா! - இந்தப்
பாருல கத்தில் அடியவர் போற்றிடும் பாலகுமரேசா!

வானவர் தானவர்மாமுனி வோர்தொழும்
வான்மயில் வாகனனே!
வான்மயில் வாகனனே! - தொந்தி
யானைமுகனுக் கிளைய பராபரமாகிய வேலவனே!

பச்சை மரகத மேனியுறும் வாலை
பார்வதி பாலகனே!
பார்வதி பாலகனே! - துய்ய
நச்சர வத்துயில் ராமன் மருமகனாகிய வேலவனே!

அசுரர்கள் தேகம் திடீர் திடீரென
அற்று விழத்தானே!
அற்று விழத்தானே! - அதிவீரமுள்ள வெற்றி
வேல்விட் டெறிந்தவோர் ஆறு முகத்தானே!

கந்தா கடம்பா குகா ஞான சண்முகா
காலா யுதப் பொருளே!
காலா யுதப் பொருளே! - உன்னைவந்து பணிந்திடும்
அடியவர்க்கு வரம் தந்திடும் மெய்ப்பொருளே!

## சின்னக்கட்டியம்

ஆதி சதாசிவன், அருளிய பாலகன்,
கோதிலா மெய்யன், கொடுக்குந் தயாபரன்
தீதில் மலைமகள், சேய் கருணாநிதி,
செங்கண்மால் மகன், தேவசே னாபதி
ஐயங்கரர்க் கிளையோன், அமரர் குழாம்பதி
வள்ளிதெய் வானை, மருவும் வளம்பதி,
அள்ளியே வெண்ணீறு அளிக்குந் தயாநிதி,
நற்றவம் புரிவோர், நன்னும் மரகத,
உத்தமன் னுலகம், உய்யவென் றேகையில்
சக்திவே லேந்தி, தரணியி லெங்கும்

சத்ருசம் ஹாரன், மித்துரு பயங்கரன்,
தானுமே நடத்தி, வானுல கம்பன்,
சட்டம் செலுத்தி, திட்டம் சமர்ப்பித்து
இஷ்டமுடனே, தேவையம் பதியில்
சிறந்தனை வோரையும் இரக்ஷிக்கிறோ மென்று,
தீர்த்தப் பிரசாதம், விபூதியும் கொடுத்து,
தமது, ரத்தின சிம்மாசனக் கொலுவிற்கு,
இதோ எழுந்தருளி வருகிறார்,
வெகுபராக்! எச்சரிக்கை!!

## கட்டியம்

சண்ட பிரசண்ட வீதண்ட மூதண்டகோ
தண்டபாணிக்கு மருகன்
தத்திமித்தாள மோடொத்து நின்றாடிய
சதாசிவன் பெற்ற முருகன்

தண்டமிழ் நிறைந்திடும் அண்டரும் முனிவரும்
தாள்வணங்கிய வேலவன்
சாலோக சாமீப சாரூப சாயுச்ய
சகலமோட்ச அதிகார கர்த்தன்!

## அகோதெய்யடியென்றால்

ஐங்கரற்கிளைய அறுமாமுகவன்
ஈஸ்வரிபுதல்வன் ஈராறுபுயத்தோன்
வள்ளிதெய்வானை மனமகிழ்கொழுநன்
சேவற்கொடியோன் சிகிவாகனத்தோன்
கருணாகடாக்ஷ வீட்சண்ணியஅலங்காரன்
உத்தண்ட மண்டலீகரன்
மதனமோகன வசீகரன்
பஞ்சபாண அவதாரன்
அஷ்டஐஸ்வரிய சம்பன்னன்
துஷ்டநிக்ர சிஷ்டபரிபாலனன்
மந்தரமகாமாணிக்க மகுடாலங்காரன்
அகிலாண்டகோடி பிரமாண்டநாயகன்
ஆபத்பாந்தவன் அனாதரட்சகன்

அனந்தகோடி அண்டங்களும் இருநூற்று இருபத்து நாலு புவனங்களும் சப்தசாகரஞ் சூழா நின்ற ஈரேழு பதினாலு லோகமும் காக்கும் வேலையே கைக்கொண்டு ஏக சக்ராதிபத்தியஞ் செலுத்தி ஒப்பற்ற சுந்தரவட்டக் குடையின் நிழலிருந்தருளப் பெற்ற ஸ்ரீசிவசுப்பிரமணியக் கடவுள் அன்னதானம் முதல் பற்பல தானங்கள் செய்து இன்றைய தினம் –

தேவிநகர் வாழ் அனைவோரையும்
அருள்புரிந்ததென்றும் ஆள்கிறோமென்றும்
தீர்த்தப்பிரசாதம் திருநீறுகொடுத்து
பாவையராட பல்லியமுழங்க
நாவலர்போற்ற நல்விருதுடனே
குவலயம்புகழும் பழனியம்பதியில்
விண்ணளவோங்க எண்ணிலாவணிகர்
பொன்னினாற்செய்த புனிதமண்டபத்திற்
நவரத்தினமும் நனிபெறஇழைத்த
நமதுரத்தின சிம்மாசனக்கொலுவிற்கு
இதோஎழுந்தருளி வருகிறார்,
வெகுபராக்! எச்சரிக்கை!!

## பெரிய கட்டியம்

சுத்தசாட்குண்ய, பரிபூரண,
சச்சிதானந்த, நிட்கள,
நின்மல, நிராமய,
சகள, காலகண்ட
திரிநேத்ர கங்காதர,
சந்திரசூட, இடபாரூடராகிய,
ஸ்ரீமகாதேவபுத்திரர் அகிலாண்டகோடி,
பிரமாண்டநாயகி, சங்கரி
வரைராஜபுத்திரி, ஸ்ரீஅம்பிகைதனயர்,
ப்ரணவசொரூப, கஜானன,
ஏகதந்த, அங்குசபாச,
கரடதடவிகட, விநாயகசகோதரர்,
கபடநாடக சூத்ரதாரி,

மாயோன்மருகர், வள்ளிமனோகரர்,
மயூரவாகனர், தேவசேனாபதி,
தெய்வானைநேயர், குருமுனிதேசிகர்
குக்குடத்துவஜர், கங்காபுத்திரர்,
கார்த்திகேயர், சுவாமிநாதர்,
சடாக்ஷரமுதல்வர், பரசமயகோளரி,
பாரிடம்தலைவர், கலியுகவரதர்,
கருணைப்பிரவாகர், சங்கத்தலைவர்,
தமிழுக்கிறைவர், ஆறுமாமுகத்தவர்,
ஆறிருதடம்புயர், பன்னிருவிழியர்
பாதாம்புயத்தார், கடம்பணிதோளர்
கதிரையம்பதியர், செந்திற்கிறைவர்
செய்வேற்படையர், ஆவினன்குடியர்
அசுரகுலத்தகர், நல்லூர்வாசர்,
நான்மறைநாதர், சூரன்சிங்கன்
தாரகன் முதலிய வீரரைத்தமதொரு
வேலாற்றடிந்தோர், பக்தவத்சலர்
பரமதயாளராகிய, ஸ்ரீசிவசுப்பிரமணியக்கடவுள்,
சுவர்ணமயமாய் அமைக்கப்பெற்ற தமது
இரத்தின சிம்மாசனத்தில் வீற்றிருந்தருளி
தம்மைவந்துதுதிக்கும் தாசர்களுக்குத்
தமது, மெய்யன்பர்களாகிய நகரத்தாரைக் கொண்டு
அன்னக்கொடிகட்டி அன்னதானம் முதலிய
தானங்களும் முப்பத்திரண்டறங்களும்
குறைவின்றி நடாப்பித்து விபூதி தீர்த்தப்
பிரசாதங்களும் ஈந்தருளி மெய்யடியார்
தமதுத் திருநாமங்களைக்கூறி ஆனந்தத்தாண்டவம்
செய்துவரவும் பலவித மேளதாள
வாத்தியங்கள் ஒலிக்கவும் தமது
திருக்கல்யாண மண்டபத்திற்கு
இதோ எழுந்தருளி வருகிறார்,
வெகு பராக்! எச்சரிக்கை!!

*– முத்துக்கருப்பஞ்செட்டியார்*

## திருப்புகழ்

நாத விந்துக லாதீ நமோ நம
வேத மந்த்ரசொ ரூபா நமோ நம
ஞான பண்டித சாமீ நமோ நம வெகுகோடி
நாம சம்புகு மாரா நமோ நம
போக அந்தரி பாகா நமோ நம
நாக பந்தம யூரா நமோ நம பரசூரர்
சேத தண்டவி நோதா நமோ நம
கீத கிண்கிணி பாதா நமோ நம
தீர சம்ப்ரம வீரா நமோ நம கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவகுஞ்சரி பாகா நமோ நம அருள்தாராய்!
ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையும் மறவாத
ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பீர நாடாளு நாயக வயலூரா
ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முநாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே!

## மங்களம்

ஆதிபரஞ் சோதிக்கும் அபிராமிக்கும் ஜெயமங்களம்
மாதுவள்ளி தெய்வானைக்கும் வடிவேலர்க்கும் சுபமங்களம்
திருவுக்கும் திருமாலுக்கும் தேவதேவர்க்கும் ஜெயமங்களம்
குருவுக்கும் குமரேசர்க்கும் குறமாதுக்கும் சுபமங்களம்
மாலருள்பிரம தேவர்க்கும் கலைமாதுக்கும் ஜெயமங்களம்
அலைசூழ்கதிர் காமம்வாழ் முருகையர்க்கும் சுபமங்களம்
செந்தமிழ்க்கவி யாளர்க்கும் புவியாளர்க்கும் ஜெயமங்களம்
கந்தனாறு முகன்வேல் முருகையர்க்கும் சுபமங்களம்.

## வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்க! வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க! குக்குடம் வாழ்க! செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க! யானைதன் அணங்கு வாழ்க!
மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க சீர் அடியார் எல்லாம்!!

## வாழ்த்து

வான்முகில் வளாதுபெய்க மலிவளம்சுரக்க மன்னன்
கோன்முறை அரசுசெய்க குறைவிலாது உயிர்கள்வாழ
நான்மறை அறங்கள்ஓத நற்றவவேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குகஉலக மெல்லாம்

## நகரத்தார் வாழ்த்து

வாழிய நகரத்தார் வள்ளன்மை மிக்கோர்கள்
ஊழி பலவும் உயர்ந்திருக்க – ஆழிசூழ்
இத்தலத்தில் கோயில் இயற்றினோர் வாழியரே
எத்தலமும் போற்ற இனிது.

*அமரர் திருமுக கிருபானந்த வாரியார் **சுவாமிகள்***

## தீப ஆராதனை

அறிந்தும் அறியாமலும், தெரிந்தும் தெரியாமலும்
செய்த சகல குற்றங்களையும் பொறுத்துக் காத்து
அருள்புரிய வேண்டும்.

ஓம்அரனார் செல்வன்
அம்பிகை தனையன்,
யானைமுக னுக்கிளையோன்
ஓம்சரவணபவனே முருகையா
குன்றுதோராடும் குமரனடியே
சரணம் முருகையா.

## பழனியாண்டவருக்குப் பல்லாண்டு!

தண்டம் ஒருபக்கம் தாங்கி, மறுபக்கம்
அண்டபகி ரண்டத்தை ஆதரிக்கும் வேல்தாங்கி
கண்டார் இதயம் களிக்கவந்த மேனியிலே
திண்ணென்று பட்டைத் திருநீறு தான்புனைந்து,
தொண்டர் குழாங்கள் துதிக்கப் பழனியிலே
பண்டாரம் ஆனார்க்குப் பல்லாண்டு! பல்லாண்டு!
பழனி மலையார்க்குப் பாடுதுமே பல்லாண்டு!

*- அருட்கவி கு.செ. **இராமசாமி***

